123

உ

சிவமயம்.

பர்த்ருகரியார்

வடமொழியில்

திருவாய்மலர்ந்தருளிய

# பர்த்ருகரி.

இஃது

திருநெல்வேலி ஜில்லாக்கோர்ட்டுப் பிளீடர்

மகா-ராஜ-ராஜ-ஸ்ரீ

கிருஷ்ணசுவாமி அய்யரவர்கள்

அநுமதிப்படி

எட்டயபுரம் மகா-ராஜ-ராஜ-ஸ்ரீ

கடிகை. நமசிவாயப் புலவரவர்களால்

தமிழின்மொழிபெயர்க்கப்பட்டு

ஷெயார்கள் மருகர்

புலவர் ஷண்முகம்பிள்ளை யவர்களால்

மதுரை

மீனலோசனி அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப் பெற்றது.

(உ-ம் பதிப்பு.)



1923.

உ

சிவமயம். ௧௨

# சிறப்புப்பாயிரம்.

---

இஃது

திருநெல்வேலி

புதுத்தெரு

மஹாராஜராஜஸ்ரீ

## கூடத்துக்குருக்களய்யா அவர்கள்

இயற்றியது.

உத்தமநற்குணசீலரிதயதாமரைமலர்த்துமுதயபானு [மார்பன்
முத்தமிழோர்கொண்டாடும்வைக்கில்கிருஷ்ணசுவாமிசெம்பொன்முந்நூன்
பத்ருகரிவடநூலைத்தமிழ்நூலான்மொழிபெயர்த்துப்பகர்தியென்ன
வெத்திசையும்புகழ்கடிகை நமச்சிவாயப்புலவனியற்றினனே.

---

இஃது.

எட்டயபுரம்

மஹாராஜராஜஸ்ரீ

## கடிகை. பரமசிவப்புலவரவர்கள்

இயற்றியது.

மணிகொண்டபொருநைநெல்லைமாநகரில்வாழு
 மாமறையோர்குலதிலகன் மறைநூலேமுதலாந்
திணிகொண்டகலாகிபுணன்வைக்கில்கிருஷ்ணசுவாமி
 தீரன்பத்ருகரியார்செய்தவடநூலை
யணிகொண்டசெந்தமிழான்மொழிபெயர்த்துப்பாடி
 யாவருக்குமுபகாரமாம்படிசெய்யெனலும்
பணிகொண்டபுவியிலுயர்கடிகையார்குலத்துற்
 பவநமச்சிவாயபாவலன்பகர்ந்திட்டானே.

---

உ

சிவமயம்.

# பர்த்துருகரியார்

## சரித்திரம்.

திருக்கயிலாயத்திறைவரிறைவியையாழ்முனிவர்சென்றுசேவித்தங்க
ணிருக்குநந்தீச்சுரர்பாற்சென்றலரிடுமாசனத்தருகிலிருக்குங்காணீ
ரருக்கன்மதிசெலாவிடத்துஞ்செல்விரங்கங்குளபுதுமையறைதிரென்னப்
பொருக்கெனவொன்றுளதெனப்பர்த்துருகரிதன்சரித்திரமேற்புகல்வதா

வேதநாராயணமாபுரமெனவொன்றதில்வாழும்விட்டுணுசன்ம [ஞர்
வேதவேதியர்க்குமுந்தியெக்ஞநாராயணன்பின்வேதவித்தாம்
வேதநாராயணன்பின்வீரநாராயணன்பின்மேலோனென்ன
வேதன்மகிழ்சந்த்ரசன்மாவெனநால்வருதித்தனர்பின்வேதம்போன்றே (உ)

அந்நால்வர்தமிற்சந்த்ரசன்மாபின்வருகினுங்கல்வியிலேயார்க்கு
முன்னாகவருவெனுமாசைவழித்துணையாகமுன்னேசெல்லத்
தன்னுடையனுடுங்கடந்துசெல்லுங்கால்விதிவசத்தங்கோரு
கின்னாற்றங்கரையடுத்துச்சந்தியாவந்தனஞ்செய்திருக்குமெல்லை. (௩)

அரசமரமொன்றவிடத்ததினிடத்திலனேகநாளாகவைகும்
பிரமராக்கசவ்வூரிற்பிராமணன்போல்வந்தனது பேரூர்யாதுன்
வரவியாதெனவினவமரபொடுமற்றவனும்வந்தவாலாறுதச்
சரசுவதிபுரமறையோன்றன்சாபமொழிந்ததுபோற்றனர்வுதீர்ந்தே. (௪)

மற்றவனும்பிரமராக்கசந்தணனைப்பார்த்தாறுமாஸ்லதைக்குண்ணுன்
கற்றதெல்லாங்கற்பிப்பேனதுவரையூணுறக்கமற்றுக்கற்பாயென்னக்
சொற்றவுரைகேட்பனெனமுன்னுருத்தான்காட்டவஞ்சித்துயரமெய்தச்
சற்றுமஞ்சேலெனத்தேற்றிப்பிற்கொடுபோயரசமரந்தன்னைச்சார்ந்தான். ()

பிரமராக்கசருமறையோன்றனையிருத்திமறைமுதலாப்பிறநூலியாவுங்
கரதலாமலகமெனச்சந்தேகவிபரீதங்களிலாமல்
வரன்முறையாய்ப்பயிற்றியவையின்னமபிவிர்த்தியுண்டாமைந்தர்நால்வ
ரரசர்யெச்சப்பெறுவையென்றாசீர்வதித்துத்தன்வரலாறறியச்சொல்வான்.()

கிருஷ்ணதீரமதிற்சரசுவதிபுரமெனுமோர்கிராமத்தோதும்
விருத்தியுடைவேதியனுன்கற்றவித்தைபிறர்க்குரையாவிரதியென்னை
யொருத்தர்மாதவத்தர்தம்புதல்வர்க்குவித்தைகற்பியென்றற்குடன்படாதாற்
பொருக்கெனவப்பெரியவர்தம்புந்திகனன்றிந்தவுரைபுகல்வதானூர். (எ)

சரசுவதிதருங்கலையைத்தன்னதெனப்பிறர்க்குதவாச்சண்டாளநீ
பிரமராக்கசாகிடுதிபிடிசாபமென்றிடலும்பெருமநல்ல
வாமருடியென்றிரக்கமனமிரங்கியன்னதிமருங்கினங்கோ
ரரசமாருண்டதிலேயனேகநாளுறியதவமாற்றியப்பால். (அ)

சந்திரசன்மாவெனுமோர்மறைச்சிறுவன்கல்விகற்பதற்காயுன்பால்
வந்திடுவானவற்குன்வித்தைகற்பியவனுற்சாபமாறுமென்ன [ணா
வந்தணவுன்வரவெதிர்பார்த்திருந்த வண்ணங்கதியடைந்தேனகல்வேனென்.
மூந்தையுருக்கொடுநடந்தான்மற்றிவனுந்தன்னூர்க்குமுடுகிச்சென்றான். (௯)

செல்வோன்செல்வழியைவிட்டுச்சினிநகாஞ்சென்றணுகிப்
பல்பகலூணுறக்கமற்றுப்படித்தவொருமயக்காலுந்
தொல்லைவினைத்தொடர்பாலும்தூமறையோனவரவர்செல்
லில்லறியாதொருதாசியில்லிடத்திற்புக்கனனால். (௰)

அந்தமனைப்புறந்திண்ணையதிற்கும்பகருணனைப்போன்
முந்திவிரித்தவன்றுயின்றுமுதனாட்போய்மறுநாளுஞ்
சந்திமுதன்மறந்துறங்கச்சௌந்த்ரவதிபார்த்திவரே
சொந்தநாயகரெனச்சந்தோடமுடனுட்சென்றே. (௰௧)

அன்னைபாலதையுரைப்பவவள்பார்த்தீதாச்சரிய
மன்னர்மதிமந்திரிகுமாரருண்மேலாசைகொள்வார்
மன்னுமிந்தத்தரித்திரப்பார்ப்பான்மேனீயாசைகொண்ட
தென்னெனத்தாய்சொல்லுமறுத்திவரேயென்கணவரென்றாள். (௰௨)

நன்றிதையூரசாண்மன்னவர்க்குரைக்கவேண்டுமெனச்
சென்றுவேதியன்செயலுஞ்சேயினை தன்மகள்செயலு
மொன்றுமொழியாதுரைப்பவுயர்துவசகீர்த்திய
னின்றமருத்துவரையதைநீர்தெரிந்துவருதிரென்றான். (௰௩)

தையலுடனவரேகித்தனித்தனியேமாமறையோன்
கையதினாடியைநாடிக்காரணமீதென்றறிந்து
மெய்ம்முழுதுமன்னமதைவெந்தரைத்துப்பூசிடுவீ
ரையமிலைக்கையினிலிவ்வையருக்கென்றுரைத்தகன்றார். (௰௪)

அந்தவுரையிறைக்கறிவித்தப்படியேசாந்திசெய்யச்
சந்திரசன்மாத்தூக்கந்தனைத்தெளிந்தோன்போலவெழுந்
திந்தமனைபொதுமனையென்றேகவெங்கேகுதிரெனவே
முந்திதொட்டுச்சௌந்த்ரவதிமுன்புவந்துமறித்தனளால். (௰௫)

மடிபிடியாயிருவோருமன்னவன்பாற்சென்றுரைப்ப
முடிவேந்தன்கேட்டிதற்கு முடிவேதிப்படிமுடிக்கும்
படிபடிமேற்சுருதியனுபவமுண்டோவுரைத்திரென
வடிவேற்கையிறைமுன்புமாமறையோர்கூறுவரால். (௰௬)

பிரமசத்திரியவசியசூத்திரப்பெண்பிராமணர்க்குரியவென்றோதக்
குரவர்சொற்படிதன்புரோகிதர்மகடன்குமாரத்திசெட்டிதன்புதல்வி
விரகமோடுடன்செல்சௌந்தரவதியைவிதிமுறைமணமுடிப்பித்துக்
கிரமமென்றெவருந்துதித்திடத்துவசகீர்த்திசற்கீர்த்திபெற்றனனால். (௰௭)

அந்நால்வர்தமக்கும்வெவ்வேறரண்மனைகள்கட்டுவித்துத்
தன்னாட்டிற்பாதிமன்னன்சந்த்ரசன்மாவுக்குதவி
மூந்நூல்வேதியனுலகமுறைதவறாதொழுகுநா
ளெந்நாளும்பின்னுதவியிறையவன்பொன்னுடடைந்தான். (௰அ)

மூனைவேந்தற்கிளவலறமுடிவேந்துதானுகி
மனைவிசௌந்தரவதிமாமன்னன்மகள்செட்டியப்பெண்
பினைமறையோன்புத்திரிபாற்பெறற்கரியபர்த்ருகரி
கனைகழற்கால்விக்கிரமார்க்கன்பட்டிவாருசியும் (௰௯)

என்றுகநால்வரும்வந்தெய்தியபின்சந்த்ரசன்மா
முன்றுதைபாத்தியமாய்மூத்தவன்பர்த்துருகரிநீ
நன்றாய்க்கைக்கொண்டுமுறைநடத்திவிக்கிரமார்க்கனுக்குத்
தன்றாய்பாத்தியமாய்ப்பின்றருதியெனப்பரமடைந்தான். (௨௰)

புவிராசர்முடிமாலைபூங்கழன்மேலழகுபெறப்புனைந்துபோற்றக்
கவிராசர்பாமாலைகன்னபூடணமாக்காதிற்சாத்தத்
தவராசராணையையுந்தந்தையாணையையுமுடித்தலைமேற்சூடிச்
சிவராசயோகரெனப்பர்த்ருகரிசெங்கோன்மைசெலுத்துநாளில். (௨௧)

பூங்கனிமாதுமையினைப்பாடலிபுரத்தோர்சுசீலனென்போன்பொருளைவே
யாங்கனிச்சமலரினுமெல்லடிதொழுதாராதிப்பவவண்மூன்றேன்றி (ண்டி
மாங்கனியொன்றீந்திதனுற்சாரமரணமாறுமிடிமாறுதென்னத்
தீங்கனிவாய்மலர்ந்தருளச்செங்கைகுவித்தேற்றிதனைச்சிந்தித்தானுல். (௨௨)

இறப்பிலாதிருந்தாலுமிரப்பொழியார்க்கிப்பலத்தாலென்னலாபம்
பிறப்பொழிக்குந்துறவோர்க்குமற்றோர்க்குமுபகாரம்பிறக்கச்செய்யு
மறப்பெருஞ்செல்வருக்குதவிலெல்லோரும்வெகுபலத்தையடைவரென்றே
சிறப்புறுபர்த்துருகரிபாற்றந்துவந்தவாலாறுந்தெரியச்சொல்லி. (௨௩)

அன்றிவற்கோர்பலந்தருவோனனேகபலம்பெற்றேகவணங்கசேனை
தின்றிடாதிதைநாமேதின்றிடலாவியையொழிந்ததேகமாவே
மென்றுநாமிருக்குமட்டுமிவனிருக்கவேண்டுமெனுமெண்ணங்கொண்டு
தன்றுணைவிக்கவன்கொடுத்தானவள்வாங்கியொருகுதிரைச்சாணிக்கீந்தான்.

அத்துருக்கன்வாங்கியங்கோரடிச்சேரிக்குதவவவளதனைவாங்கிப்
புத்துருக்குநெய்விடிடையற்குதவவதனையந்தப்புரந்துர்த்தேகும்
பித்துருவாமவன்மனையாள்வாங்கியொருகூடையதின்பேரில்வைத்துப்
பத்துருகரிக்கெதிரிற்செலவவன்கண்டையமுற்றப்பழத்தைவாங்கி. (௨௫)

முக்கனிக்குஞ்சிறந்ததெனத்தருஞ்சுசீலனையழைத்துமுழுப்பொய்யாக
வெக்கனியோதந்ததென்றுயக்கனிபோலெத்தனைபாரிதுபாரென்ன
மிக்கவியாயாதிபதிதக்கவுபாயத்தினிதைவிசாரிப்பாயே
லக்கனியேயிக்கனிவேறையமிலையென்றுரைத்தங்ககன்றானையன். (௨௬)

அப்படியேதனித்தனிமற்றைவரையும்விசாரணைசெய்தனங்கசேன
னிப்படியானாலெவரையெப்படிநம்புவதுசெகத்தெல்லாம்பொய்யே
மைப்படியுங்கடைவிழியார்கண்மயக்கங்கண்மயக்கமாமெம்மீசர்க்
கொப்படிமையாகுதலேயுறுதியதேயுறுதியெனவுளத்திலுன்னி. (௨௭)

நிக்கிரகானுக்கிரகிபர்த்ருகரிதந்தைமுன்சொன்னெறிதப்பாம
லுக்கிரணமுகசூராயூகிபட்டிவாருசிமற்றுள்ளோரோடும்
விக்கிரமார்க்கனைமுன்வரவழைத்தவற்குச்சகலசெயவிருதுந்தந்து
சக்ரவர்த்தியாயிரெனவரமருளித்தன்மகுடந்தரித்துப்பின்னர். (௨௮)

முந்துவிடயங்கள்பற்றல்விடற்கனங்கசேனையேமூலமென்னப்
பந்துவிடயங்களொழித்திருவினையொப்புமலபரிபாகமெய்தி
யைந்துவிடயக்கொடிவேரறுத்துஞானாக்கினியினாலேயெல்லாம்
வெந்துவிடயத்தினப்பட்டெல்லோர்க்குமேலானவிவேகவேந்தாய். (௨௯)

நீதிசிங்காரம்வைராக்கியசதகமெனவுலகநீதியாவு
மேதினியோரறிந்துய்யமுந்நூறுசுலோகத்தால்விரித்துக்கூறிப்
பாதிமதியணிந்துமைக்குப்பாதியுருப்பகுந்தளித்தபரமஞானச்
சோதிவெளியொடுகலந்துநித்தியானந்தசுயஞ்சோதியானார். (௩௰)

சைவமறைமுதல்வர்சிவராமகிருஷ்ணசாஸ்திரிசெய்தவத்தால்வந்தோன்
ஐவருக்குமுன்புவந்தோனறுவருக்குமுன்புவந்தோனடுத்தோர்யார்க்குங்
கைவருநெல்லியங்கனிபோல்வந்தகிருஷ்ணசுவாமிபர்த்ருகரிசெய்நூலை
யெவ்வெவர்க்குங்கைப்பொருள்போற்றத்தமிழாலியற்றுகெனவியற்றினே
(னே.

பர்த்துருகரியார்சரித்திரம்.

# முற்றிற்று.

---



உ

சிவமயம்.

# பர்த்துருகரியார்.

## கடவுள் வணக்கம்.

### விநாயகர்.

சீர்பூத்தகயிலைமலைச்சிவபெருமானிடம்பிரியா
வார்பூத்தகொங்கைமலைமங்கையுமைபெற்றெடுத்த
வேர்பூத்தவொருபிறைக்கோட்டிருதாண்மும்மதநால்வாய்க்
கார்பூத்தவைந்துகரக்கற்பகக்கன்றினைத்தொழுவாம். (௧)

### பரமசிவம்.

விடையானையன்பர்பணிவிடைகொள்பணிவிடையானைவிரிநீர்க்கங்கைச்
சடையானைப்பரவைதம்பாற்சந்துசெலச்சடையானைத்தடக்கைச்சூலப்
படையானைக்கடையேனையின்னமுருப்படையானைப்பனைக்கைமான்றோ
லுடையானையுலகமெல்லாந்தானாகவுடையானையுளத்தில்வைப்பாம். (௨)

### பார்வதி.

ஆத்தாளைச்சராசரங்களனைத்தினுக்குமண்டபகிரண்டமியாவுங்
காத்தாளைக்கரியமுகிற்கிளையாளைப்பஞ்சகர்த்தாக்களிலெல்லோர்க்கு
மூத்தாளைமுகமதியிற்கருணைவிழிக்கமலமிளமுறுவலாம்பற்
பூத்தாளைநினைந்துருகிப்புகழ்ந்திரண்டுபூத்தாளைப்போற்றுவாமே. (௩)

### சுப்பிரமணியர்.

பொருமயிலைச்சேவலைப்போர்புரிபடையாயுயர்கொடியா
யொருமயிலைவாகனமாயுவந்தருளும்பெருமானைச்
செருமயிலைவிழிமடவார்தெய்வானைவள்ளியெங்க
ளிருமயிலையிடம்பிரியாதிருந்தானையிறைஞ்சுவாம். (௪)

### சரஸ்வதி.

காணியாவென்கருத்துற்றுத்தன்கழ
லேணியாய்ச்சுவையேற்றிக்கலைக்கடற்
றோணியாகத்துறைபலகாட்டுநா
வாணிசெம்பொன்மலரடிவாழ்த்துவாம். (௫)

## சமயாசாரியர்.

என்பரவையுடையரிவரெனக்காட்டுந்தமிழ்விரகரிருதாள்போற்றி
யன்பரவையெங்கணுமென்னப்பரப்பரெனத்துதிப்பாரவர்தாள்போற்றி
பொன்பரவைசங்கிலிதன்ருெடர்புடையவாரூரர்பொற்ருள்போற்றி
தென்பரவைஞாலமுய்வித்திடும்வாதவூரரெந்தைதிருத்தாள்போற்றி. (௬)

## திருத்தொண்டர்.

தில்லைவாழந்தணர்கண்முதலானநாயன்மார்திருத்தாள்போற்றி
தொல்லைநூலாசிரியராகியபர்த்ருருகரியார்துணைத்தாள்போற்றி
கல்லையொருமென்கனியாக்கலைப்போலென்வஞ்சநெஞ்சக்கல்லையாக்கு
மெல்லையிலாச்சிவனடியாரவரடியாரவரடியாரிணைத்தாள்போற்றி. (எ

## அவையடக்கம்.

பர்த்ருருகரியார்பகர்ந்தருள்வடசொற்பாடலையுயிர்வடிவினையோர் [ணுட்
சித்திரத்தெழுதல்போன்மொழிபெயர்த்துத்தென்சொலாற்சொலப்புகுமித
பித்தர்வாயுரைபோற்சொற்பொருள்களிலும்பெரும்பிழையிருக்கினுந்தத்தம்
புத்திரர்மழலைப்புன்சொல்போலென்சொற்புல்வரியாவரும்வியப்பாரே. (அ)

---

# நீதிசதகம்.

## மூர்க்கபத்ததி.

## பரஸ்துதி.

அட்டதிக்குக்காலாதிகட்களவுப்படாவாகியனந்தமாகித்
தட்டறவெங்கணுநிறைசின்மாத்திரமூர்த்தியதாகிச்சாந்தமாகி
நிட்டையுறுஞ்சுவானுபூதியினுன்மாத்திரமறியுநிலைமையாகி
மட்டறுதேசோருபமானபரம்பொருளினையாம்வணக்கம்செய்வாம்.

பூமேவுபுலவரெல்லாம்பொருமையினுன்மறைபட்டார்
பீமேவுபிரபுகள்கெர்விகளானுர்மற்றவர்க
நமேவுமஞ்ஞானசிரோமணிகளானதனுற்
பாமேவுமருங்கலைகள்பயன்படாதொழிந்தனவே. (க)

தெரிந்திலாதவனைச்சுகமாய்த்தெரியச்செயலாம்விசேட மதாய்த்
தெரிந்தவனைநேராய்த்தெரியச்செயலாநலந்தீங்கிதுவெனவே
தெரிந்துந்தெரியாமூடனைச்சீர்திருத்தித்தெரியச்செய்யவெல்லாந்
தெரிந்துவிதிக்கப்படும்பிரமதேவன்றனக்குமுடியாதே. (உ)

இடங்கர்வாய்மாமணியையெடுத்திடலாநெடுந்திரைசூழ்
தடங்கடலைத்தாண்டிடலாந்தலையின்மேன்மாலையதாய்ப்
படங்கொள்பாம்பணிந்திடலாம்பாழ்மூடர்க்கறிவுறுத்தி
யடங்கிநடந்திடச்செயவல்லாரொருவரில்லையே. (௩)

தீவிறமணலிலெண்ணெய்யுண்டாக்கினுங்
கானனீரொடுத்துத்தாகத்துக்குண்ணினுங்
கூன்முயற்கோடுகைக்கொளினுமூர்க்கரைத்
தானிதப்படுத்திடத்தகாதியார்க்குமே. (௪)

எவன்மதகரியைத்தாமரைத்தண்டினிழையினாற்கட்டவல்லவனோ
வெவன்வயிரத்தைவாகைமென்பூவாலிருபிளவாக்கவல்லவனோ
வெவன்மதுத்துளியாலுவர்க்கடன்முழுதுமினிமையுண்டாக்கவல்லவனோ
வவனிதவசனத்தாலுமூர்க்கரைநேராக்கிடச்செய்திடலரிதே. (௫)

ஆடவரிலொன்றுமறியாதவனுஞ்ஞானம்வெளியாகாமல்வாய்
மூடலெனுமொருதிரையைச்சுவாதீனமாய்ப்படைத்தான்முளரிமேலோன்
றேடருநல்லறிஞர்சவையம்மூடன்செலிலவன்வாய்திறவாமோன
பூடணமேபூடணத்தின்மேலானபூடணமாய்ப்புனைதனன்றே. (௬)

அற்பவித்தைமகாகெருவியாமெனல்போனானெனுமாங்காரத்தான்முன்
விற்பனசிரேட்டனெனமதோன்மத்தனாய்த்திரிந்துவிட்டேனப்பாற்
பற்பலகற்றுணர்பெரியோர்சகவாசத்தான்மூடபாவந்தீர்ந்து
சொற்பமேதோவறிந்துமறியாதவனாய்க்கெர்வமெல்லாந்தொலைந்தவன்றே.

இருமிநெளிசாளைவாய்கீழ்வடிநீரொடுநாற்றந்
தருகழுதைமுழுவெலும்பைத்தான்கடிக்குங்காலையிற்றன்
னருகினிலிந்திரன்வரினுமவமதிப்பாய்த்தன்னிழிவை
யொருவிதத்துமெண்ணாமலுளமகிழும்புன்னாயே. (௮)

மீதலவானதியீசன்விரிசடைநீளிமயவரை
பூதலவைப்புவாழிபுக்கிழிந்துகீழான
பாதலத்திற்புகுவதுபோற்பகுத்தறிவுபோய்த்தலைகீ
ழாதலுக்குமூர்க்கர்கதியனேகவிதமாகிடுமே. (௯)

துன்றியதீகடசலத்தாற்சுடுவெயிலோர்சுளகதனாற்
குன்றுறழ்மாமதகளிறங்குசத்தெருதுகழுதையொரு
வன்றடியானோய்மருந்தால்வல்விடமந்திரத்தாற்போ
மொன்றினுமூடர்கள்குணத்தையொழித்தருளமுடியாதே. (௰)

## மூர்க்கபத்ததி முற்றிற்று.

---

பத்ததி — வரலாறு.

# வித்வபத்ததி.

—ooo—

கலைமதிராணுறச்சகலகலைபடைத்துப்பிறர்க்குநல்குங்கவிசிரேட்டத்
தலைமையுறுமவர்மிருந்தகுந்தவித்யாதானதனசம்பத்துள்ளோ
ரிலையெனவொன்றிரக்கினந்தக்குறையரசர்க்கல்லதிவர்க்கில்லைநல்ல
விலைமதியாமணிதெரியாதவர்மதியாவிடினுமதுமேன்மைதானே. (௧)

கைத்தனம்போலழியாதுவித்தியாதனப்புதையல்கற்பாந்தத்துஞ்
சத்துருசோராக்கினிகளபகரியாவொருத்தருக்குத்தாமீந்தாலு
நித்தமபிவிர்த்திசுகங்கீர்த்தியுண்டிவ்விதத்தகலாநிதியம்பெற்ற
வித்துவசம்பனரிடத்தில்வேந்தரேமாச்சரியம்வேண்டாந்தானே. (௨)

வாரணந்தாமரைநூலில்வசப்படமாட்டாதமது
தீரணமாஞ்சம்பத்துத்திரணமவர்க்காதலினற்
பூரணபண்டிதரிடத்துப்போக்குகொர்வந்தனைப்போக்கித்
தாரணிமன்னவரேசந்ததம்வரைப்போற்றுவீரே. (௩)

அன்னமுயர்த்திடுங்கொடியோனகங்காத்தாற்பயங்காஞ்செய்
தன்னமலர்த்தடத்துலவுல்லாசமதைத்தடைசெய்வா
னன்னியிலற்புதமாய்ப்பாலையுந்தண்ணீரையும்பிரித்தோ
ரன்னியமாய்ச்செயுஞ்சத்தியதைவிலக்கமாட்டானே. (௪)

சுந்தரத்தோள்வளையாரந்துலங்குமுத்தாரங்களபங்
கந்தமலரிவைகளலங்காரமல்லவெப்போது
மைந்தர்களுக்கலங்காரம்வாக்குப்பூடணமாகு
மந்தப்பூடணந்தானேயழிவிலாப்பூடணமே. (௫)

மைந்தருக்குவித்தைபொருளெழில்கீர்த்திசுகம்போகமற்றுநல்குந்
தந்தைதாய்குருதெய்வந்தானுறும்பரதேசந்தனக்குநட்பா
மெந்தராசருமதிக்கச்செயுமதற்குச்சமானமொன்றுமில்லைமேலா
மந்தவித்தைகல்லாதோனறிவிலாமிருகசெந்துவாகுந்தானே. (௬)

பொறுமையேமெய்க்கவசங்குரோதமேபகைஞாதிபுறத்திற்றீயா
மூறவினர்மாமருந்துதுட்டருரகவிடஞ்சிறந்தவித்தையுயர்ந்தசெல்வ
நிலறுமானமேமணிப்பூண்கவிசொல்லேராச்சியமேனிகழ்த்தற்பால
பெற்றபெருமையாதியுடையார்க்கொருகவசமுதலானபிறவேண்டாவே. ( )

உற்றவர்பாற்றுட்சணியமூழியர்பாற்றயவதுட்டரிடத்துள்வஞ்சங்
குற்றமில்சாதுக்களிட்டங்கொற்றவர்பானயம்பொறுமைகுரவர்தம்பாற்
பற்றலர்பாற்சௌரியநற்பண்டிதர்பாரனேர்நடத்தைபாவைமார்பாற்
சற்றுமணங்கலங்காமையிக்குணமெல்லாமறிஞர்தன்மையாமே. (௮)

புத்தியீனம்பாவம்போக்குவிக்குநல்வாக்குச்
சித்திமரியாதைமனத்தெளிவிச்சுண்டாக்குவிக்கு
முத்தமமாங்குணமனைத்துமோருருவாஞ்சித்தபரி
சுத்தபரமார்த்தசாதுக்கள்சகவாசமதே. (௯)

தன்மசொரூபிகள்சாராசாரமுழுதும்மறியும்
வன்மைமிகுங்கவீசுரர்கண்மாநிலத்துமேன்மையுளார்
நன்மைமிகும்புகழுடம்புநாடொறும்பெற்றவரவர்கள்
சென்மசராமரணபயஞ்சிறிதுமில்லாதவர்களே. (௰)

வித்வபத்ததி முற்றிற்று.

---

# சௌரியபத்ததி.

---

கெட்டதிசையால்விபத்துப்பிராணபயபீடைபழங்கிழமைத்தன்மை
மட்டில்பசியாலிளைப்புவருத்தந்தேசிழத்தலிந்தவகையுற்றாலுந்
துட்டமதயானைமத்தகத்துளமாமிசமுணவேசுபேச்சையல்லாற்
பட்டினிக்குப்பயந்துலர்ந்தபுற்கடிக்கச்சிங்கமொருப்பட்டிடாதே. (௧)

பங்கமுறும்புன்னாய்தன்பசிதீராவிடினுமதிற்பற்றுநீங்கா
தங்கமுறுங்கொழுப்புவசையழிந்தொழிந்தமிருகவிடக்கதனைக்கவ்வுஞ்
சிங்கமெதிர்நரியைவிட்டுக்குஞ்சரமேற்சென்றுகொன்றுதின்னத்தேடுந்
தங்கள்சத்திக்குத்தகுந்தபலத்தையிச்சிப்பார்சகலசனமுந்தானே. (௨)

வாலாட்டிநிலங்கீறிமண்டரையிற்புரண்டுமுகம்வயிற்றைக்காட்டி
மேலாட்டியெசமான்முன்னேழைமையைக்காட்டிடுநாய்மிகவும்வேண்டிக்
கோலாட்டும்பரிபாகர்குணகிருதாதியகவளங்கொடுக்கவாங்கித்
தாலாட்டுஞ்செவியாட்டித்தலையாட்டிச்சாப்பிடுமாதங்கந்தானே. (௩)

கவரெடுத்தசமுசாரசக்கரத்திற்கவன்றுசுழன்றிறந்துபிறவாதாரில்லை
யெவரெடுத்தசென்மமுமிப்புண்யசாலியெடுத்தசன்மந்தனக்குநிகரில்லையெ
ன்ன, வெவரெடுத்தகடற்புவிக்குட்குலத்துக்கெல்லாமுயர்குலமாய்த்தங்குலத்
தையுயர்த்தச்செய்யு, மவரெடுத்தசென்மமேசென்மம மற்றவரெதற்கேயெ
டுத்தசென்மமாகுந்தானே. (௪)

சவுரியமானிகட்கிரண்டேசார்கதிபூங்கொத்தினைப்போ
லெவர்களுங்கொண்டாடிடவேயிராசருக்குமேலாவார்
புவனமதிற்றாழ்வுவரிற்புல்லரிடம்போயலையா
தவர்வனவாசிகளாகியடங்கிச்சீவிப்பாரே. (௫)

குருமுதற்சோலோந்திலோயுங்குரூரியான்கெடுமதியா
லொருதலையேமிஞ்சினவனுடற்குறையானடற்குறையா
னிருதர்குலத்துறமிராகுமித்தமிராப்பகல்விளக்கு
மிருசுடரைப்பருவமறிந்தின்னம்வருத்திடுவானே. (௬)

சானிலமெல்லாஞ்சேடன்பணமகுடபந்தியிலெங்காளுந்தாங்குங்
கூனன்முதுகாமையவன்றனைத்தாங்குஞ்சகலமுமோர்கொம்பிற்றாங்கக்
கானவராகந்தனக்குச்சுவாதீனமாஞ்செயலைக்கடூனல்கு
மானசவுரியவான்கட்குண்டாகுமாண்மையிவ்வாறுகுந்தானே. (௭)

இந்திரனெல்லாமலையுமிறகரிந்தவர்நாளிற்
றந்தைமலையிறைகுலிசத்தடிபடலால்விசனமுறா
மைந்தனுமைநாகன்வாருதியிலாழ்ந்துமறைந்
துய்ந்துபோனதிலுமெதிர்த்துயிரிறத்தனன்றோ. (௮)

ஞானசூரியகாந்தமசேதனமாயிருக்கினுமே
லானசூரியகிரணத்தடிபடுமுன்காந்திவிடு
மானசவுரியவான்கண்மருவலர்கள்செய்யுமவ
மானமதையெப்படியோமனந்துணிந்துபொறுப்பாரே. (௯)

பிறந்திடுஞ்சிங்கக்குட்டிபிறக்குமுன்குதித்துத்துள்ளி
மறந்தலைக்கொண்டுநால்வாய்மண்டையைப்பிளக்கச்செல்லுஞ்
சிறந்திடுஞ்செயப்பிரதாபச்சேவகர்சுபாவமிவ்வா
றிறந்திடுமாயுண்மூப்போடிளமையுங்குறித்திடாரே. (௰)

சௌரியபத்ததி முற்றிற்று.



# அர்த்தபத்ததி.

சாதிபாதலம்புகச்சற்குணமதற்குங்கீழ்ப்புகுகசாம்பலாகத்
தீதில்குலநன்னடத்தைசிலம்பினின்றுங்கீழ்வீழ்கசோரார்தம்மைக்
கீர்த்தியசௌரியத்தலையிலிடிவிழுகபொருளேயெங்கட்குமேன்மை
யேயாதியவக்குணங்களெல்லாமொருபொருளின்றேற்றுருமபுக்கொக்குந்தன
னே. (௧)

எவனிடத்திலதிகதிரவியங்களிருப்பிருக்குமோ
வவனேசற்குணன்குலமானதிருபிமகாவாக்கி
யுவமையிலாப்பலகேள்வியுடையோனல்லறிவுடையோன்
புவனமதிலெக்குணமும்பொருளையேபொருந்திடுமே. (௨)

சந்நியாசிசேர்க்கையிற்சேய்தண்டியாமையிலந்தணர்மறைகல்லாமையி
னிட் டம்பிரிய மிலதாள், மன்னவர்துன் மந்திரியா லுலகிலுயர் குலந்த
ன் மதலையா னன்னடக்கை தட்டர்பழக் கத்தா, னன்னிதிய மாதியசம்
பத்தநீ தியினு ணமது வுணவானட் புப்பரவா சத்தாற், செங்கென்முத
லானபயிர் கண்பாரா ததினுற் றேடுபொருள் போற்றாத தாலழிவெய்
திடுமே. (௩)

தானமும்போகமுந்தன்னுஞசமு
மானமுக்கதிபொருட்காகுமேலைய
தானபோகத்தினிற்சார்ந்திடாப்பொரு
ளானமூன்றுங்கதியடைதறிண்ணமே. (௪)

மருவலர்கையாயுதத்தடிபட்டதீரர்மும்மதத்தினின்மெலிந்தயானை
யொருகலைகுறைந்தமதிசுரதத்தினற்சிரமமுற்றதோர்யுவதிசிறிய
கருமணற்கொழிசரற்காலநதிசாணையிற்கடைந்துதேய்ந்திடுமாமணி
யிருகைமுகிலென்னவரையாதருடியாகிதம்மிளைப்பினில்விளங்குவர்களே.

வறுமையுற்றபோதொருவனொருபிடிதானியத்தையொருமலைபோலெண்ணு (ற்
முறுபொருளுற்றிடிலுலகையொருதிரணமாகவெண்ணுமூழாலுற்ற
நிறைபொருளின்செருக்குமில்லாமையின்றாழ்வுமிவ்விதமாய்நினைப்பதல்லா (௬)
குறைவுகுறைவேநிறைவுநிறைவேமற்றவைக்கிலையோர்குறைவுதானே.

கன்றிசருங்கோவேந்தேகோவாங்கோவைநாடொறும்பால்கறக்கினதைநம்பி
கன்றிசருங்கோவேந்தேகோவாங்கோவைநாடொறும்பால்கறக்கினதையா
வாழும், கன்றெனும்பல்லுயிர்களையுங்கைவிடாமற்கற்றவைப்போற்றவையா
ய்க்காக்கவேண்டு, மென்றநீரப்படியேசர்வான்மாக்களிடத்துநல்லதயைபுரி
ந்துகாப்பீரானன், மன்றல்புரிகற்பகப்பூங்காவைப்போலமாறாதசெல்வமது (௭)
வழங்குந்தானே.

பேசசத்தியமசத்யம்பிரியமாமின்சொல்வன்சொல்
யாசகர்க்கீகைலோபமருளுடனிரக்கமின்மை
காசிலாசையதாய்த்தேடல்கணக்கிலாச்செலவுசெய்தல் (௮)
வேசைபோலிராசர்நீதிவெகுவிதமாகுந்தானே.

கீர்த்தியாக்கினைசினேகிதர்க்குநல்லிதம்
பூர்த்திசெய்தானம்பூசுரர்சம்ரட்சணை
யார்த்திடுபோகமிவ்வாறுமுற்றிடாப் (௯)
பார்த்திவர்சேவையிற்பலனொன்றில்லையே.

முன்னையொருவற்கெழுதியபடியேமுடிந்திடுமூற்றினுமூந்நீர்
தன்னினுங்குடத்துச்சலங்கொளுமட்டேதான்கொளும்பொருந்துவபொருந்
தும், புன்னிலஞ்செலினும்பொன்வரைசெலினும்பொருந்துவதேதோவதே
பொருந்து, முன்னெளிமையையாரிடத்தும்வாய்விடாதுள்ளுறுதிகைவிடா (௰)
திருப்பாயே.

அர்த்தபத்ததி முற்றிற்று.

# துர்சனபத்ததி.

சாதுக்கள்பந்துசனரிடத்தின்மச்சரமோ
ரேதுவிலாமற்போரிடலிரக்கமின்மையபர
மாதர்பரசொத்தின்மனம்போக்கன்மற்றனைத்தும்
நீதகலாக்கெட்டதுட்டர்சென்மசுபாவமதே. (க)

தக்கமணிமாமுடியிற்றுங்கரவைக்கண்டவுட
னக்கணையேயாவருமுள்ளஞ்சியயனீங்குவபோற்
றிக்குமெச்சம்வித்துவசிரேட்டர்துட்டரேலவரை
யிக்குவலயத்தோரொவரும்விட்டுநீங்குவரே. (உ)

விரதிடம்பாகாரன்மூனியறிவிலிகற்கசிகவடிவெட்கிமந்தன்
சாசியெளியோன்சூரன்றயைபிலிவாசகதாடிசாலைவாயன்
பிரபாவன்கெருவியெனவவரவர்சற்குணமுமுழுதும்பிழைபாய்ப்பேசிச்
சுரர்முதலரெல்லோர்க்குந்துற்குணங்கற்பித்தறுட்டர்சுபாவமாமே. (௩)

சந்தியசன்னடைபுலுத்தம்புறங்கூறன்மகிமைபுனிதம்மேலான
வித்தையவகீர்த்திபுறின்றவங்கேண்மைதுற்குணந்தீவினைசேர்பாவம்
வத்திரபூடணவலங்காரந்தீர்த்தமெல்லோருமதிக்குமாசம்
பத்தியமனிவ்வெட்டும்வதிற்றேடவேண்டாமிப்பாரிற்றுனே. (௪)

பகன்மதியெளவனங்கழிந்தபாவைதரித்திரசிலர்பகரமாகி
யகரமுதலெழுத்தறியானம்புயமில்வாவிபணத்தாசைமீறுஞ்
சகாரசரவரிடத்திற்பிரியாமற்சேவைசெய்துசாருந்துட்டர்
மிகவேழுமெனதுமனத்தேழுசூலாயுதம்போல்விளங்குந்தானே. (௫)

இங்கிலத்திற்றுட்டமன்னர்க்கேற்றபடிகாத்திருந்து
தன்னவனுயிட்டந்தனைப்பெறுவாரியாருமில்லை
முன்னிருந்துதன்பொருட்டுமுத்தீவளர்ப்போரை
வன்னிதயவில்லாமல்வாட்டிவெப்பமூட்டிடுமே. (௬)

பேசினச்சுவாயனென்றும்பேசாலுமன்புறத்திற்
கூசிநின்றேன்பேடிசமிகோழையெதிர்நின்றவிசு
வாசியஞ்சாதோனெனச்சொன்மாமூர்க்கராசருட
னேசித்திருப்பதுசந்நியாசிகட்குங்கூடாதே. (௭)

துன்மந்திரிக்குத்துரைத்தனமெல்லாங்கொடுத்துத்
தன்னைமறந்தக்கிரமன்றன்னிலுமக்கிரமனிவ
னென்னமுன்னந்தெய்வகதியிற்கிடைத்தசெல்வமுடை
மன்னர்நட்டுள்ளோர்க்குமற்றோர்க்குசுகமில்லையே. (௮)

சற்சனரிட்டம்பகற்பிற்சாயையைப்போன்முற்குறுகி
முற்பகற்சாயையைப்போற்பின்முழுப்பிரியமுண்டாகுந்
துற்சனரிட்டம்பகன்முற்றெருடர்சாயைபோலாய்ப்பின்
பிற்பகற்சாயையைப்போலப்பிரியமற்றுப்போய்விடுமே. (௧)

தானேபுன்னீர்சுகவாசத்தாற்சீவிக்குநல்ல
மானேடுமீன்கண்மகத்துகளையிம்சிக்கக்
கானேயும்வேடர்வலைகாரர்தீக்கோளரவ
ரேனேவோர்காரணமில்லாதுபகையாவாரே. (௨)

## துற்சனபத்ததி முற்றிற்று.



## சுசனபத்ததி.



குருவணக்கஞ்சிவநேசங்கொண்டமனையாட்டியுடன்கூடல்கல்வி
வருவதிலேகவலைதுட்டர்சேர்க்கையினைநீங்கலபவாதத்தஞ்ச
லருண்மிகுஞ்சாதுக்கள்சகவாசமதிலாசைமனதடக்கத்தன்மை
பொருவிலயமேலோர்குணத்திற்பிரியமிவையுடையோரைப்போற்றுவேனே (௧)

ஆக்கத்திற்சம்மியாபத்திலாண்மைவேந்தவையினல்ல
வாக்குச்சாதுரியங்கல்விவரத்தினிற்கவலைமேவ
லூக்குவெம்போரின்மாறுச்சவுரியத்தன்மைகீர்த்திக்
கேக்குறவாஞ்சைகொள்ளலிவைநல்லோர்சுபாவமாமே. (௨)

சிரத்தினிற்குருவின்பாதந்திருமுகத்தினின்மெய்வாக்குக்
கரத்தினிற்றியாகந்திண்டோன்களிற்பராக்கிரமமித்த
முரத்தினிட்களங்கங்காதிலுண்மைச்சாத்திரநூற்கேள்வி
தரித்திரத்துறினுமேலோர்தமக்குப்பூடணங்களாமே. (௩)

பரபொருளிற்பரசிவவிம்மிசையின்மனநிவிர்த்திபரஸ்திரீகள்
சரசவிருதாவழிச்சொற்றனிலூமைகுருவணக்கஞ்சத்யவாய்மை
யிரவலருக்கியன்றகொடையவாநீங்கனற்றயையாரிடத்தும்வைத்தல்
வரன்முறையாமிந்தநெறிமங்களத்தைக்கொடுத்தருளுமார்க்கந்தானே. (௪)

உற்பலம்போற்சம்பத்துறின்மெலிதர்மாபத்திற்
கற்பலம்போன்மெத்தக்கடினமதுவாயிருக்கும்
பற்பலநற்றபோபலத்தாற்பற்றெவையும்விட்டொழிந்த
விற்பனசாதுக்களிடமேவுசித்தவிருத்தியதே. (௫)

அன்பர்பானீதிநெறிப்ராணனீங்கினும்பவஞ்செய்யாமைமேலோர்க்
கின்பமுறநன்கியற்றறன்புறினுந்தீரம்விடாதிருத்தறுட்டர்
முன்புமிட்டரிடத்துமிடியுற்றிடினுமிரவாமைமுதலாமிந்த
வன்படைவாண்முனையினிற்குமகாபெரியவித்தையையார்வரச்செய்தாரே. ()

இரவலர்சென்றிடின்விரைவிலெழுந்திருக்கைமுதன்முகமனியற்றன்மிக்க
திரவியமுள்ளடக்கமொடுசெலவுசெய்தல்செல்வமுறிற்செருக்கில்லாமை
புரவலர்பாலியாவருக்குமுதவிசெயல்பரர்சரிதம்புறத்தெள்ளாமை
யிரவுமிந்தவாண்முனையினின்றிடக்கற்பித்ததெந்தவீரன்றானே. (௭)

காய்ந்தகரும்பொன்வாவிக்கமலவிலைகடற்சிப்பி
தோய்ந்தநீர்பெயர்கெடன்மேற்றோன்றன்முத்துத்தோன்றிடல்போல்
வாய்ந்ததமன்மத்திமனுத்தமர்தம்பான்மருவினர்க
ளாய்ந்துமேற்சொன்னபடியனுபவிக்கப்பெறுவாரே. (௮)

பத்தாவினுக்கினைதப்பாதேநடப்பவளே
யுத்தமிதந்தாயர்தந்தைக்குள்ளமகிழ்விப்பவனே
புத்திரன்றன்கேடாக்கம்போலவன்கேடாக்கமெண்ணுஞ்
சித்தமுடையோனேசினேகனிவருத்தமரே. (௯)

அன்னியர்தங்குணத்தைமெச்சித்தங்குணமேலாக்கல்பணிவான்மேலாக்க
லன்னியர்க்குத்தன்காரியத்துடன்சேர்த்தனுகூலமாக்குவித்த
லன்னியிற்றுட்டர்கடூற்றுமலர்பொறுத்துத்துக்கமவர்க்காக்கலிவ்வா
றன்னியோன்னியபாவமுடையாரையாராதனைசெய்யாரே. (௰)

சுசனபத்ததி முற்றிற்று.

## பரோபகாரபத்ததி.

தக்கமதுரக்கனியைத்தாழ்ந்தளிக்கும்பூந்தருக்க
ளக்கரியமுகினீரையமுதமெனக்கொடுக்குமியற்
கைக்குணமாயெப்போதுங்கைமாறேருதியார்க்கு
மிக்கபெரும்பொருடேடிமேலோர்களீகுவரே. (௧)

குண்டலத்தாலல்லக்குழைச்செவிநூலால்விளங்கு
மொண்டொடியாலல்லசெங்கையோங்கீகையால்விளங்குந்
தண்டரளமாலிகைதண்சாந்தாதியாலலமெய்
யண்டையுபகாரமதனாலேவிளங்கிடுமே. (௨)

மதியாதவன்குவளைவாரிசத்தின்போதாய்ந்
துதியாமுகமலர்ச்சியுண்டாக்குங்கேளா
தெதிரேறுதின்னீரினைப்புலிக்குநல்குந்
ததிமேகநல்லோர்தயவுமதுபோலாமே. (௩)

தனக்குவரும்வரத்தொழித்துப்பிறர்க்குதவிசெய்பவன்சற்புருடனாவான்
றனக்குவரும்வரத்துடனேபிறர்க்குதவிசெய்பவன்சாமான்யனாவான்
றனக்குதவியாம்பொருட்டுப்பிறர்க்கிடர்செய்பவனராக்கதனேயாவான்
றனக்கதிலோர்வரத்தொழிந்தும்பிறர்க்கிடர்செய்வோற்கிடப்பேர்தனைக்கா
ணோமே. (௪)

தீங்ககற்றிச்சற்கருமஞ்செய்வித்தடக்கமறைத்
தோங்கியநற்சீலமுயர்வித்தாபத்தினிலே
பாங்கடைந்தோரியாரையுங்காப்பானெவனேமற்றவனே
யீங்குச்சினேககுணமெல்லாமமைந்தோனே. (௫)

முன்னீரைத்தன்மயமாய்ச்செய்தந்நீரெரியனலின்முதலில்வற்றப்
பின்னமுறத்தானும்வற்றிக்கூடவேதனையடைந்துபினுமாற்றாதவ்
வன்னிதனில்விழத்துணியத்தண்ணீரைக்கண்டுபெருமகிழ்கூர்பால்போ
னன்னீர்மையுள்ளசினேகிதர்நடத்தையெனமேலோர்நவிலுவரே. (௬)

ஓரிடத்தின்மால்சயனமோரிடத்திலசுரரோரிடத்தூழித்தீ
யோரிடத்திலுகாந்தமுகிலோரிடத்திற்பருப்பதங்களொருங்குமேவ
வோரிடவித்தாரமூர்ச்சிதம்பொறுமையதிபாரமுடைத்தாயெல்லா
மோரிடத்திற்றன்சுமந்துசுமைதாங்கியெனக்கடன்மேலோங்குந்தானே. (௭)

எடுத்துலகச்சுமைமுதுகிற்பொறுத்தகூர்மமிரவிமதிநாள்கோளோரைகளை
யெல்லாந்,தொடுத்தொருசக்கரத்தில்வைத்துச்சுழற்றியாட்டுந் துருவனிவர்
தோற்றமேதோற்றமாகு, மடுத்தபிரமாண்டமென்னுமத்திக்காயு ளடைந்தி
ருக்குமசகமெனப்பெருநீராடை,யுடுத்தமண்மேற்செனித்தசெந்துவெல்லாம்
வீணேயுடல்பலவாயெடுத்துவிடுத்துழலுந்தானே. (௮)

கெடுத்திடுபாவமதமவாவறுசற்கீர்த்திகாபகைவரைநயப்பா
யடுத்திடுபொறைசாதுக்கணன்னெறியையனுசரிவித்துவசனரைத்
தொடுத்தருள்குருவன்னார்களைச்சேவிதூயமெய்மொழியினைநவிற்று
நடுத்தவறாதீனர்பாற்றயைசெய்நல்லவர்செய்கையீதாமே. (௯)

திரிகரணபுண்யார்த்தசித்தபரிபூரணராய்த்
திரிலோகமகிழநலஞ்செய்தருணிர்விகாரிகளாய்ப்
பரசுகுணபரமாணுப்பருப்பதம்போனினைப்பவராய்ப்
பரமசாதுக்கள்சிலர்பாரில்விளங்குவர்களே. (௰)

பரோபகாரபத்ததிமுற்றிற்று.

# தைரியபத்ததி.

வாசமுறுமணியால்வானோர்மகிழ்ந்தாரா
பாரவிடங்கண்டுபயந்தாராபின்னையந்தப்
போமுதுண்டாகும்பிரயத்தினத்தினைவிட்
டாரறிஞர்நிச்சயார்த்தமதைநீங்காரே. (௧)

எத்தினியார்கேடுறுமென்றேயதமர்மத்திமர்க
ளெத்தினித்துமத்தியிற்கேடெய்துவாருத்தமர்க
ளெத்தினித்தகாரியத்தையெவ்விதத்திலும்முடிப்பா
ரெத்திசையிலுள்ளவர்களெல்லோருமெச்சிடவே. (௨)

மண்டலையிலொருகாற்பூவணையிலொருகாற்பள்ளி
கொண்டிலையோர்காலொருகாற்குளகிருதாதியகல்லூ
ணுண்டுடுப்பார்கந்தையொருகாலொருகாற்பொன்னுடை
கண்டசுகாசுகத்தையெண்ணார்காரியஞ்சாதிப்பவரே. (௩)

நிந்திக்கின்மெச்சினிதியுறிற்போகின்முடிவு
வந்துவிடின்மாயாவரத்துடனல்வாழ்க்கையுறி
னிந்தவிதமெப்போதெப்போதேதேதெய்திடினுந்
தந்தநிலைமைதவிரார்நற்றீரர்களே. (௪)

பாவையர்கடைக்கட்செந்தீப்பகழியைக்கடந்தார்யாரோ
தீவிடமனையகோபத்தீயினிற்குளியார்யாரோ
வாவல்கூருலகபாசமறுத்தவர்யாரோவன்னோர்
மூவுலகினையும்வென்றுமுரண்வென்றதீரராமே. (௫)

விற்பனர்கணோங்கும்வியன்குணத்தைக்கீழ்ப்படுத்த
வற்பருக்குச்சொற்பனத்துமாகாவாம்யாதொருவன்
முற்பிடித்தகொள்ளிமுனிக்கொழுந்தைக்கீழ்ப்படுத்திற்
பொற்பிரபைபோலப்புகைந்துமேலோங்கிடுமே. (௬)

நீடசலமாமுடியினின்றுமண்ணில்வீழ்ந்திறுதல்
வேடனைப்போற்றீக்கணுற்றுவெந்துபொடியாகிடுதல்
சேடன்வாய்க்கைவிடுதநீர்க்கமொடுமேன்மைநல்ல
பூடணமாஞ்சற்குணத்தைப்போக்கன்மிகக்கீழாமே. (௭)

அங்கிநீர்முந்நீர்வாய்க்கான்மேருவோர்சிறுகற்
சிங்கமான்பாம்புசிரோரத்தினங்கடலிற்
பொங்குவிடமமுதமாம்புண்யபரிபாகமிகத்
தங்குபரிசுத்தசித்தசத்வகுணசீலருக்கே. (௮)

முந்தவெட்டப்பட்டகட்டைமுன்போன்மரமாகுஞ்
சந்திரனுந்தேய்பிறையாய்த்தானேவளர்ந்திடுவா
னிந்தவிதமேயிறந்துபிறந்துள்ளோரைச்
சொந்தமெனவெண்ணிச்சாதுக்கண்மனநோகாரே. (௯)

உற்றிடுமைச்சுவரியஞ்சவுரியமெய்ஞ்ஞானத்தொடுசாத்திரமொண்செல்வ
நற்சமத்துத்தவந்தருமமிவைகளுக்குப்பூடணமேனன்மையான
சற்சனபாவம்மௌனஞ்சமம்வினையந்தாந்தெரிந்துதால்சகித்தல்
செற்றமிடம்பங்கெடலெக்குணங்களுக்கும்பூடணஞ்சுசீலமாமே. (௰)

## தைரியபத்ததிமுற்றிற்று.

# தெய்வபத்ததி.

குருகுருபேராண்சுவர்க்கங்குலிசமாயுதந்தேவர்
பொருபடையைராவதம்வெம்போதகமாலனுக்கிரகி
மருவுமிப்பேறடைந்தவலாரியுமசுரர்க்கஞ்சிடுவா
னருள்விதியின்பெலம்பேலமேயல்லான்மற்றொன்றிலையே. (௧)

மெலிவொடுபெட்டியுளடங்கியொடுங்கிவெருவியவரவம்விடவாய்ப்பட்ட
வெலிதனைத்தின்றதுதனுணவெணித்துளைத்தவழியின்வெளியேறிச்சீறி
வலியொடுமுன்னிளைப்பாறியுயிர்பிழைத்துப்போயினபோன்மனிதர்யார்க்கு
நலிவடையுமானிவிர்த்திதெய்வபெலமேபெலமாய்நடக்குந்தானே. (௨)

மேலாகும்பந்ததுகீழ்வீழ்ந்தாலுமேலெழும்பு
மேலோருமப்படிக்கீழ்வீழ்ந்தாலுமேலாவார்
மேலாகாமண்ணுருண்டை வீழ்ந்தபடிகீழடங்கு
மேலாகாவற்பனுங்கீழ்வீழ்ந்தபடியடங்குவனே. (௩)

மொட்டைத்தலையன்கடுவெயிலான்முடுகிப்பனைநீழலிற்குறுக
நெட்டைப்பனையின்பழம்வீழ்ந்துநேரேமண்டைசிதறியதா
விட்டமுடையதெய்வபெலமில்லாதவர்போமிடங்களுக்கு
விட்டுவிடாமலடிநிழற்போல்விபத்தும்பிறகேதொடர்ந்திடுமே. (௪)

எதிரில்யானைபாம்புபட்சியிவைகள்சிறைப்பட்டுழலவிரு
கதிர்களிராகுகேதுவின்வாய்க்கௌவப்படுதலுலகுதனி
லதிகவிவேகவான்களில்லாமையினல்வருத்தமடைதல்கண்டு
விதியின்பெலமேபெலமலதுவேறொன்றிலையென்றெண்ணுவனே. (௫)

குணமணிகட்கிருப்பிடமாய்க்குவலயத்துக்கொருமணிமகுடமாய்ச்செய்த
வுணர்வுடையபுருடரத்தினங்களுக்குப்பூரணவாயுட்டாமற்
சணமதனிற்பிணமாகிச்சாம்படிக்குப்பண்டுவிதித்தருள்போதாவை
மணமிலாமுருக்கனையான்மூவட்டிகனென்றெண்ணாதாவையந்தானே. (௬)

*சதபிசக்குக்கெசமானன்சங்கரற்குத்தலைப்பணி*யோ
டதிகளுக்குநாயகன்புத்தமுதினுக்கோரிருப்பிடமா
மதியொழியாச்சயரோகமாற்றவலியிலையென்றால்
விதிவலியையெவராலேவிலக்குதற்குமுடிந்திடுமே. (௭)

அக்குயவனென்னும்விதியாபத்தகத்தண்டினடித்
தொக்கமிதித்துருட்டியமண்ணுருண்டையினைச்சிந்தையெனுஞ்
சக்கரத்தின்வைத்திடையிற்றரிகொளாமற்சுழற்று
விக்குமேலென்னசெய்துவிக்குமோதெரியாதே. (௮)

---

*சதவிசக்கு-சதயம்-நூறுவயித்தியன், *ஓடதி-சஞ்சீவி முதலிய பச்சிலை.

அடசடமாம்விதியேயாபத்துறுங்காற்குணசீலர்
திடமொருகாலிடருறலைத்தெரிவாமென்றகத்தினினை
மடமையொழித்திடுமாறிமாறிவரும்பிராளயத்தும்
கெடலுடைத்தாயலைகடலுங்கிரிகளுந்தாழ்வடையாதே. (௯)

ஆசார்க்கெதுவோவூழ்வசத்தாலடைதறடையற்றடைவிக்கும்
பேராசையுமற்றொருவருடபிராயத்தினமும்வேண்டாமிப்
பாராசையைத்தீர்த்திடும்பொருட்டுப்பருவாபருவமறிந்துபெய்யுங்
காராற்சிலதுளிசாதகப்புட்குதவியாகிடுமே. (௰)

எந்தவம்பாத்தையெவ்வெல்லுடுத்தியே
வந்திடுவாணதைவாங்கிமாலையிற்
சந்திரனுடுத்திடத்தருந்தரித்திர
மூந்தியவிதியினன்முடிந்ததாகுமே. (௰௧)

தெய்வபத்ததி முற்றிற்று.

## கன்மபத்ததி.

துதிவழிநான்றொழுதேத்துந்தொல்லையுறுதேவர்களும்
விதிவழிச்செல்குவர்விதியும்வினைவழியேபலனுதவு
மெதிர்பலனுங்கன்மவசத்திதனற்றேவரும்விதியு
மதிகமல்லக்கன்மமேதியகமெனத்தொழுவாமே. (௧)

எந்தவினையாலயன்குயவனெனப்பூமுழுதுஞ்சிட்டிப்பா
னெந்தவினையாலரியுருப்பத்தெடுத்துக்காட்டின்மறைபட்டா
னெந்தவினையாலரனிரந்தானிரவியெதிருற்றினமலைவா
னந்தவினையையெப்பொழுதுமகத்தும்புறத்தும்நினைகுவாம். (௨)

துட்டர்சாதுக்களாகச்சுமடர்வித்வான்களாக
விட்டர்சத்துருக்களாகவெரிவிடமமுதமாகக்
கட்புலத்தமையாவொன்றைக்காணச்செய்கருமந்தன்னை
கிட்டைமாநிதியாய்த்தங்கணினைவிலாராதிப்பீரே. (௩)

நல்லமனைபெண்டிர்முதனானாவிதமான
செல்வமெல்லாமவரவர்கள்செய்திடுநல்வினையாலா
மில்லையேற்சையோகத்தினினூலற்றுதிர்ந்துவிடு
மெல்லியமுத்தாரமெனவேநசித்துப்போய்விடுமே. (௪)

நல்லகன்மமானாலுந்தீயகன்மமானாலுநாளுமேலோர்
வெல்வதுந்தோற்பதுநானாவிதத்தறிந்துசெய்திடுகவிரைந்துசெய்யிற்
பல்விதமாமல்லலிடைப்படுத்தியிருதயத்தையிருபகுப்புச்செய்யுஞ்
சல்லியவெம்படைபோலெப்பொழுதும்வருத்தத்தினையேதருங்கண்டீரே. ()

எவன்மணிக்கடத்தைச்சந்தனவிறகிட்டெட்டுவைசமைத்திடுவானோ
வெவனருங்கற்பூரவாழையைவெட்டியேவரகினைவிதைப்பானோ
வெவனொருவெருக்கம்பஞ்சுக்காய்ப்பொன்னின்கலப்பைகொண்டேருழு
வானோ, வவனிர்ப்பாக்கியனாய்க்கன்மியாய்ச்சென்மித்தறிவிலானறவம்புரியி
லானே. (௬)

மன்னவர்தஞ்சேவைவடிவுகுலங்கல்வியொடு
நன்னடத்தையோர்பலமுநல்காதொருக்காலு
முன்னாலேசெய்ததவமுற்றுபலன்பூந்தருப்போற்
றன்னாலேவந்துதருங்காலந்தந்திடுமே. (௭)

மன்னவரைப்பொன்வரையையடுத்தாலுமுழுதொழில்வாணிபஞ்செய்தாலும்
பன்னுமறுபத்தினாற்கலையினையுங்கற்றாலும்பகைவென்றாலு
மென்னபடிபட்சிகள்போற்றலைகீழாய்ப்பறந்துதிரிந்தெங்குற்றாலுங்
கன்மவசத்துறுவதுறமெவ்விதத்துமுறாதநீங்காதுதானே. (௮)

சத்துருபோர்தீநீர்சலதிவரைவனத்தின்
மத்திபுலிகாடிமத்தியிலேதூங்கிடினும்
புத்திமயங்கினவன்போலேதிரிந்தாலு
முத்தமமாங்கன்மமுயிர்த்துணையாய்க்காத்திடுமே. (௯)

முன்னாட்டவமனைத்துமுற்றியசாதுக்களுக்குச்
சொன்னவைநெஞ்சைச்சுடுங்கொடும்பாலைக்காடு.
நன்னாடாமெல்லோருநட்பாவார்பற்பலவாம்
பொன்னாதிமாமணியைப்பூமிவிளைவித்திடுமே. (௰)

கன்மபத்ததி முற்றிற்று.

நீதிசதக முற்றிற்று.

# சிங்காரசதகம்.

## *ஸ்திரிபிரசம்ஸை.

எந்நாளும்மயன்மாலீசனையும்பைந்தொடியார்க்கேவலாளாய்த்
தந்தருளுமிறைவனைச்சந்திரன்வசந்தன்சிநேகிதனைச்சகத்தில்யார்க்கும்
விந்தைபுரிதன்சரிதம்விரித்துரைத்தற்கடங்காதவீரன்றன்னை
வந்திரதமிருட்கனிறூர்மன்மதனைச்சந்ததம்வந்தனஞ்செய்வாமே. (௧)

நயமுறுமந்தகாசநாணமுண்மனோவிகாரம்
பயமிகுபிணக்கசூயைபராமுகங்கடைக்கட்பார்வை
வியனுறுமதனலீலைமிருதுவசனங்களாலு
மய்யிலாரையும்விடாமன்மடவியர்மயக்குவாரே. (௨)

*ஸ்திரிபிரசம்ஸை = பெண்களைப்புகழ்ந்துகூறல்.

புருவவில்லொடுகண்பொருகடாட்சநாண்
டருநகையின்சொல்பின்றங்கிநின்றிடல்
பெருமிதநடையிவைபெண்கட்கொப்பிலா
வொருமணிப்பூணுமாயுதமுமாகுமே. (௩)

விற்புருவத்தோடுபயம்வெட்கம்விலாசங்கரமப்
பற்று*மனோகரமுடையபார்வையர்கள் பார்வைதரு
மற்புதமாநயனவிசாலங்களவைதிசையனைத்து
முற்பலமாமலர்நிறைந்ததோவெனவேமலர்ந்ததுவே. (௪)

இந்துமுகங்கமலவிழியெழில்வண்டார்கூந்தல்முலை
தந்திமத்தகம்பருத்தசகனந்தேன்பொழியுமொழி
சுந்தரமோருருவாகத்துலங்குசெம்பொற்காந்தியிவை
செந்திருமின்னனையார்க்குச்செய்யாதபூடணமே. (௫)

சல்லாபங்குறுநகைசேறனைப்பொருசஞ்சலவிழியொப்
பில்லாச்செந்தளிர்வடிவாயிலங்கியபூடணமனைய
வுல்லாசநடைகாந்தியுடையயுவதிகளெல்லாம்
வல்லார்தஞ்செய்கையெவர்மனத்தையுமுள்ளாக்கிடுமே. (௬)

அந்தமுறும்பார்வைகட்குமுகஞ்சிரேட்டமாஞ்செவிக்குப்பிரியவசனஞ்சிரேட்டங், கந்தமதிற்சிரேட்டமுககமலக்காற்றுக்கைதீண்டிற்சுகந்தருதல்கனகமேனிச்,செந்துவர்வாயமுதமதுமதுரமாகுஞ்சிந்தனைக்கெவ்வனபருவஞ்சிரேட்டமந்தச், சுந்தரமின்னார்களவயவங்களெல்லாஞ்சேர்ந்தநாயகர்க்கதுகசிரேட்டமாமே. (௭)

அன்னக்குழாத்தையடிச்சிலம்புமேகலைகைச்
சொன்னவளைமற்றைத்தொனியாற்றாத்துவிக்கும்
பொன்னனையார்மடமானைப்பொருவுகடைவிழியர்லே
யிந்நிலத்துமானிடரையெவரைத்தான்மயக்காரே. (௮)

குங்குமச்சேறங்கமிசைக்கொங்கைமேன்முத்தாரம்
பங்கயப்பாதத்தொலிக்கும்பாதசரமேமுதலாய்த்
தங்கமதவேள்விபவந்தன்னைத்தினம்வளர்க்கு
மங்கையர்கட்டழகாரைவாஞ்சைகொள்ளச்செய்யாதே. (௯)

மகளிர்தம்மக்கவிகடொறுமகர்கவிக†ளபலையெனல்
விகடவசனம்மலதுமெய்யலவிந்திரன்முதலோர்
ஜெகதலத்திலவராலேசெயித்திடப்பட்டவாறு
லகவிடத்திற்பின்னையவரபலையெவ்வாறுவாரே. (௰)

---

*மனோகரம்=மனத்தையபகரித்தல் †அபலை=பெண், துற்பலம்.

கொங்கைமதகரிதேரல்குல்வாட்கணரசியார்
மங்கையர்தம்மாக்கினையைமாநிலமெலாநடத்தித்
தங்களருட்பார்வையெங்கேதான்படுமோபட்டவிடத்
தங்கசனங்கங்கவர்தமராளாகத்திரிவானே. (௰௧)

இருவிழிக்கடைகள்§சுருதியைக்கடந்ததிருட்குழல்¶சமயமிமதிகூர்
திருமுகந்$துவிராசிகட்கிடந்தனங்கள்சிறந்த‡முத்தாவளிவிளங்கு
மருவுமிவ்வாறுசாந்தமோருருவாய்வந்திடுமடவியரெம்பா
லருளிலாதனங்கனோடுசேர்ந்திராகமதனையுண்டாக்குவித்திடுமே. (௰௨)

வணங்குவில்லம்பாற்செயிப்பார்மாநிலத்தோரெல்லோருங்
குணங்களாரெலன்மார்பைக்கூறுபடுத்தினையதனு
விணங்குபுருவச்சிலைநீளிருவிழியம்பெலாமுடையா
ரணங்கேநீசெய்தசமத்தாச்சரியமாகிடுமே. (௰௩)

எண்ணிலரத்தீபமிரவிமதிமற்றையுடுக்
கண்ணிலாத்தோற்றங்கலந்திருந்துமென்னைசைப்
பெண்ணரவசக்கூடிப்பிரிந்துவிட்டமாத்திரமே
மண்ணும்விண்ணுமொன்றாய்மறைக்குமந்தகாரமதே. (௰௪)

பெருத்ததனமருட்டும்விழிபிறழ்புருவஞ்சிவத்தவிதழ்
கருத்தழியச்செய்தறகுங்காமவேளெழுதியதோ
ரருத்தமுறும்பாக்கியாக்கரம்புரைரோமாவளியும்
வருத்துவதுமத்தியஸ்தமாமதற்குத்தகாததே. (௰௫)

சந்திரகாந்தமுகத்தானீலக்காரளக
பந்தியாற்செய்யபதுமராகக்கரத்தால்
விந்தையொடுகாந்திவிளங்குமணிமயமாய்
வந்தொருபெண்மாமணியிம்மாநிலத்தில்விளங்கியதே. (௰௬)

பந்துமுலைகள்Ψகுருபார்தஞ்*சனைச்சரங்கள்
சந்தர்வதனஞ்†சரசகலைதாமாக
வந்தக்கிரகவடிவாய்விளங்குகின்றா
ரந்தக்கரகமலத்தாயிழைகளியாவருமே. (௰௭)

பெருத்ததிருதனஞ்சகனம்பெண்கள்முகமழகதென
வொருத்தரைப்பார்த்ததுபோலெவ்வொருத்தரையும்பார்த்ததனால்
வருத்தமொடுசஞ்சலமேன்மனமேயவ்வெண்ணமுறிற்
கருத்தொடுபுண்ணியஞ்செய்யாக்காலதுமேற்கிட்டாவே. (௰௮)

---

§சுருதி=காது, வேதம். ¶சமயமி=கூந்தல்முடிப்பு, சந்நியாசி. $துவிராசி=தந்தபந்தி,பிராமணர். ‡முத்தாவளி=முத்தொழுங்கு,முத்தர்கணம். Ψகுரு=பெரிது,வியாழம். *சனைச்சரம்=மெள்ளநடத்தல், சனி. †சரசகலை=சரசத்தோடுகூடியகலை.

சித்தசன்றனக்குச்செயந்தரல்சித்தத்தினைக்கவர்ந்திடுதலெவ்வனசம்
பத்ததாம்புதியபரிமளமுடைமையாயில்சுரதாரம்பமுடைமை
மெத்தவுங்காதற்கேதுவிவ்விதத்தமின்னனார்விலாசயாபார
கித்தமுமூலகிற்செயத்தினைப்பொருந்துங்மித்தமாய்விளங்கிடுமதுவே. (௰௧)

இட்டமிகும்விசுவாசமினிமைமதுரம்பிரிய
நட்புவகையழகுடைத்தாய்நாங்கேட்கத்தகுந்ததா
யொட்டுறுகாமப்பயிரையுண்டாக்கத்தக்கதாங்
கட்டழகிவார்த்தையென்றன்கருத்தையபகரித்ததே. (௰௨)

ஸ்திரீபிரசமிசை முற்றிற்று.

# சம்போகவருணனை.

விரகவேதனையாலேமேனியிளைத்தவளொருத்தி
மாநிழலிற்போயிருந்துவலத்தோண்மேன்முந்திகொடு
காமலரால்வீசிவருங்காற்றதனுண்மாற்றரிய
சுரமனையகொடியநிலாச்சூடுசிறிதாற்றுவளே. (௧)

பாராதபோதிலுனைப்பார்த்தாலும்போதுமென்று
கோரகப்பார்த்தானினைத்தழுவிற்போதுமென்னும்
பேராசையாற்றழுவிற்பெண்ணேநமதாக
மோராகமாய்ச்சேர்ந்துளமருவவெண்ணிடுமே. (௨)

கொந்தளகஞ்சாதிமலர்குங்குமமேன்மார்பிலுயர்
கந்தபொடிமாமுகத்திற்காமவுல்லாசம்பொருந்த
வந்தமருவோர்க்குடையமானினியார்கிட்டிடுவ
திந்திராதியர்போகமேயல்லால்வேறில்லையே. (௩)

முதலிலற்பச்சேர்க்கைபின்னேமோகமதன்பின்னைவெட்கஞ்
சிதலமுயற்சிகணழுவுதீரமிகுபிரமைநிரம்
புதலேகாந்தப்புணர்ச்சிபொருந்துமங்கசங்கமமிவ்
விதமுடையகுலமாதைமேவுசுகஞ்சுகமாமே. (௪)

மார்பழுந்தப்புல்லிமலர்க்கூந்தல்சோரவரைப்
பார்வையதனோடுபரிசுரதசிரமத்தால்
வேர்வைசிந்தமின்னார்விருந்திடிதழ்ச்செந்தேனை
யார்வமுடன்றுசிபார்ப்பாரதிட்டசாலிகளே. (௫)

சையோகஞ்செய்காதலர்காதலிகள்சற்றுப்
பொய்யரைக்கண்மூடிப்பொருந்துகலவிச்சேர்க்கை

மெய்யுணர்விலேன்றே விளங்குவதுண்டாயினது
மையன்மதவேட்கு மனமகிழ்ச்சிசெய்திடுமே. (௬)

ஏதமுறுநரைதிரைகளெழுந்துமதகேளியையோர்
போதகலாதிருக்கையதுபுருடர்தமக்குசிதமல்ல
மாதனந்தாழ்ந்திடிலுடன்சீவனஞ்சுசமாதருக்கொழிக்கும்
வேதனையோர்சமத்தனெனமேலோர்களுரையாரே. (௭)

பெண்ணாசைக்கடல்கடந்தபேராரவ்வாசையுண்டு
பண்ணுவதெவ்வனமதுபோய்ப்பணமிருந்துபலனென்னே
மண்ணாளுந்திறல்வேந்தேவாலிபம்போகாமுனமென்
கண்ணாட்டியுடன்கூடக் கடிமனைக்குச்செல்வேனே. (௮)

போகமதவேட்குறைவாள்புகுமதோகதிக்கேது
மோகவிளைவுக்குவித்துமுழுப்பவமாசைக்குறைபுண்
மேகுலமறிவினற்கிவ்விதமெவைக்குந்தானுடம்பா
டாகவருமெவ்வனம்போலவனியில்வேறேதுளதே. (௯)

சிங்காரதாருவுக்குப்புயல்கேளிரசத்துக்குச்செலப்ரவாக
மங்கசற்குப்பிரியபந்துசாதுரியுச்செஞ்சொன்மணிக்ககன்றவரசி
மங்கலிளைத்திரசகோரங்களுக்குச்சந்திரமண்டலமிவ்வாறு
தங்கியவ்வனமாதரிடத்துமயலடையாருத்தமர்கடாமே. (௰)

தாமரையனையகண்கள்சரிகைமென்றுகில்பூரித்துத்
தேமலார்தனங்கடேய்ந்தசிற்றிடைகல்லென்றூர்க்கும்
வாமமேகலையமாதர்வந்தருகிருந்தாற்பின்னைப்
பூமன்னர்சேவைதன்னைப்புத்திமாறுற்றிடானே. (௰௧)

அத்திரநேர்விழியாரில்லாவிடிற்கங்காதீரம்
வித்தகஞ்சேரெம்பெருமான்விடைமுறித்ததருநீழல்
சித்தர்குகையிமயவரைசென்றிராதெவன்பொருளை
நத்தியொருவரைச்சுமந்துநாணமற்றுத்திரிவானே. (௰௨)

இல்லறமேநல்லறமாமென்றிடையினீங்காமற்
பல்விதமாமல்லலிடைப்பட்டுழலுமில்லாள
மெல்லிநல்லார்தம்மயக்கைவிட்டொழிந்தான்முத்திநெறி
செல்லுநெறிதூரமல்லச்சீக்கிரமேசெல்வாயே. (௰௩)

கன்னல்பகுங்கழைபோன்றுதான்றருப்பைமூலமதைக்
கன்னுனியுநற்கொய்திளமான்களுக்குதவாயல்லவெனிற்
கன்னனிகர்வென்னிலையைக்கைவிரலாற்கிள்ளியந்தக்
கன்னியிளமுலைவிழிமான்களுக்காவதுதவுவையே. (௰௪)

---

கேளி = மகளிர்விளையாட்டு.

துரிதங்களுக்கேயிருப்பிடமாய்ச்சுகமீதகர்முதலுடைத்தாய்ப்
பரிபக்குவமற்றில்லாதபஞ்சவிடயங்கெடுதியதே
யரியபிரத்தியுபகாரமதற்குச்சமானமிலைமாதர்
பிரியமலதுபின்னைமற்றைப்பிரியம்பிரவஞ்சத்திலையே. (௰௫)

கண்ணிதமாங்காரியாகாரியத்தைத்தேரறிஞர்
கண்ணிதமுங்கங்கைக்கரைசூழிமயவரைக்
கண்ணிதம்பஞ்சேவித்தல்காரியமதன்றிமின்னார்
கண்ணிதம்பஞ்சேவித்தல்காரியமென்றோதுவரே. (௰௬)

மண்டலத்திற்பொய்யாமில்வாழ்க்கையையோசித்திடுங்காற்
கண்டபிரமாணுபவக்காட்சியினையநுபவமாய்க்
கொண்டிருத்தலல்லதுபெண்குறியினிற்கைவைத்திருத்தல்
பண்டிதரிவ்வழியிலொன்றைப்பகுத்தறிந்துகொளனெறியே. (௰௭)

பங்கப்படுத்தும்பவக்கடல்விட்டேற்றுசுத்த
கங்கைக்கரையினல்லாற்காமுகரைக்கேளியினுற்
றங்கைப்படுத்துஞ்சமத்துடையமங்கையர்கள்
கொங்கைக்குவட்டிற்குடியிருக்கைநன்றரோ. (௰௮)

வித்தாரமானவிருதாவழிப்பேச்சே
வித்தாரணியிலிரண்டுநுகர்ந்திடும்பொருள்கண்
மூத்தாரக்குத்துமுலையாரைமேவுசிர
மத்தாற்பெறுமெவ்வனமும்வனமுந்தானே. (௰௯)

வட்டமுலைமாதரைப்போன்மனோகரமாம்பொருள்கிடையா
திட்டம்விசுவாசமுறவில்வாழ்க்கைக்கேதுமவர்
கட்டநட்டங்களுக்கெல்லாங்காரணமுமவாதனை
யட்டதிக்கெங்கணும்வெளியாயறியாதபேரிலையே. (உ௰)

சம்போகவருணனைமுற்றிற்று.

---

# காமினிகர்கணம்.

---

சுத்தவாபாசமாந்தோற்றுருத்தியாம்பெண்ணையானை
மத்தகங்கொங்கைநீலமைக்கண்விற்புருவமென்னப்
பித்தர்போற்புகழ்ந்துபேசிப்பிரியமோடணைந்துமேவும்
வித்துவான்கண்மாமோகவிகாரமாச்சரியந்தானே. (௧)

எண்ணிடில்வெத்தாபமெதிர்நோக்கிற்கண்மயக்கம்
வண்ணமுலைதீண்டின்மதிமயக்கமுண்டாக்கும்
பெண்ணணங்களைப்பிரியைபிரியையெனக்
கண்ணிலாமாந்தர்களிந்துரைத்தல்பொருந்தாதே. (௨)

எந்நேரம்பெண்கள்கண்ணுக்கெதிராலேகாண்பாரோ
வந்நேரவரைபுருடர்க்கதிபிரியந்தருமமுதா
மெந்நேரமவர்கள்கண்ணுக்கெதிராலேகாண்கிலையோ
வந்நேரம்ப்ராணசங்கடஞ்செய்விடமாகிடுமே. (௩)

தன்னேரில்லாதசருவாங்கபூடணியா
மின்னேயமுதும்விடமுமொருவடிவா
முன்னேயமாகின்முயங்கமுதவல்லியன்றேற்
பின்னேவிடமாய்ப்பெருந்துயரைச்செய்திடுமே. (௪)

சந்தேகஞ்சாகசந்தோடம்மவநம்பிக்கைக்காதாரமாகி
யந்தரவிக்கினநரகத்துவாரம்வஞ்சப்பேழைவிடவமுதமாகிச்
சொந்தநண்பன்றன்கழுத்திலிடுநாணுக்கெதிரிடுநாண்சுருக்குமாகிப்
பந்தனமாகியஸ்திரியெந்திரத்தையிந்தவிதமெவனேபடைக்கின்றானே. (௫)

சந்திரன்போன்முகங்காவிதனைப்போற்கண்ணென்பதும்பொய்தங்கமேனி
யிந்தவுடலென்பதும்பொய்கவியால்வர்ணித்துவஞ்சித்திடும்விவேக
ருந்தசைமாமிசந்தோலென்பூத்தைமலமூத்திரநீரொழுகக்கண்டு
மந்தபுத்தியாற்பேதைமடவாரைப்புகழ்ந்துசித்தமயங்குவாரே. (௬)

கூடப்பிறந்ததிராகம்பதுமினிக்குப்பிறகே
கூடத்தொடர்ந்தலையும்வீணில்வண்டின்குழாமதுபோற்
கூடப்பிறந்ததுலீலாவதிகட்குக்கோலமவர்
கூடத்தொடர்ந்தலைவார்வீணிலேமையல்கொண்டவரே. (௭)

சந்திரகாந்தியைவென்றதாமுதத்தால்விளங்குஞ்
சுந்தரமான்விழிச்செந்துவர்வாய்ச்சிகள்சோதிமுக
முந்தவிளநறுந்தேமாங்கனியின்முதிர்கனியா
யந்தம்புருடர்க்குத்தீராதகஷ்டமுண்டாக்கிடுமே. (௮)

தண்கமலமுகங்கூந்தற்பாசிமீன்விழிகள்குயஞ்சக்ரவாகம்
வெண்மணற்குன்றிருசகனமடிப்பலைநீர்ச்சுழிகொப்பூழ்மேலேயோங்கும்
பெண்களெனுங்கான்யாற்றுப்பிரவாகந்தனையகலும்பிரிவேநன்கா
மண்ணுலகிற்சமுசாரக்கடன்மூழ்கப்பிரியமற்றவர்க்குத்தானே. (௯)

ஒருவனுடனேவாய்பேசுமொருவன்முகத்தைக்கண்பார்க்கு
மொருவன்பிறகேமனந்தொடருமுண்மையுடையசமத்திகள்யாம்
பிரியம்பிரியமும்மையெனப்பேர்பேராகச்சொல்வரவர்
பிரியம்பிரியாதிவர்களிலியார்பேரிலுளவோதெரியாதே. (௰)

பார்வைவிடம்விலாசமுடைப்படப்பொறிகள்பொருந்தியமற்
றோர்விடமாமிவ்விடத்துக்கொதுங்கவராவிடந்தீண்டிற்
றீர்விடமுண்டாமணிமந்த்ராதியினாற்பெண்ணெனுமிப்
பேர்விடமந்திரத்தாலும்பிறவாலுந்தீராதே. (௰௧)

செனிப்பெனும்வாரியிற்பெண்ணெனுந் தூண்டிலைச்சேர்த்தெறிந்து
கனித்துவர்வாயிதழாகியமாமிசகண்டந்தின்னு
மனித்தரெனுங்கெண்டையீன்களைக்காமவலையன்பற்றி
யினித்திடுமோகக்கனன்மூட்டியேசமைத்திட்டுண்பனே. (௧௨)

மனமாந்தனிவழிச்செல்பவனேதனமால்வரையாற்
றினமாருஞ்சோரத்தனையாகுமவ்வஞ்சியர்புரமாம்
புனமூடுபோகிலைபோனலவிடத்தெப்போதும்பல்விக்
கினமேசெய்மன்மதனுஞ்சோரனங்கிருக்கின்றனனே. (௧௩)

பெருகமுதக்கொடியாவர்பிரியமுண்டேல்விடக்கொடியாம்பிரியமின்றேன்
மருவியவல்விடந்தீண்டின்மாற்றுதற்குப்பலவிதமாமார்க்கமுண்டு
கருமையும்வக்கிரமுமுடைக்காரிகையார்பார்வைபட்டாற்காதன்மீறும்
புருடருக்குமருந்துமாந்திரிகனுந்தேடிற்கிடையாபுவியிற்றானே. (௧௪)

நடனங்கானந்தனமர்த்தனுதியமுதாரசங்கந்த
மடவாரிடத்திலுண்டென்றுவஞ்சித்திதசத்துருவாக
வடடாவெகுகாரியக்கெடுதியாகும்படிக்குவிடமனைய
விடயமனைத்துமெனைமயக்கிவீணேமோசஞ்செயதனவே. (௧௫)

முன்னைமணிமந்த்ராவுடதத்தாலுநிவிர்த்திசெய்யமுடியாமற்றை
யென்னவிதமாயனந்தஞ்சாந்திசெய்தபோதினும்போக்கெய்தாமோக
சன்னதத்தாலங்கமதில்விகாரமுண்டுபண்ணுவித்துத்தரியாவண்ணம்
மன்மதனும்பசாசமெனைச்சக்கரம்போற்கண்சுழலமயக்குந்தானே. (௧௬)

அந்தகன்விருத்தன்மூடனழிகுலன்குட்டரோகி
தந்திடுமொருகாசுக்காய்த்தனம்பிறர்க்கொடுத்துப்போதப்
பைந்தருமேலேசூழ்கற்பகமதிக்கொடியுங்கொய்யு
நிந்தைசேர்பொருட்பெண்டிர்மேனினைவினையெவன்வைப்பானே. (௧௭)

ஆசைகூரழகாஞ்சமித்தால்வளர்
வேசையாம்விரகாக்கினிமேன்மதன்
பூசைசெய்பவர்பொற்றனமெவ்வன
மோசையாலளித்தோமஞ்செய்வார்களே. (௧௮)

சாரர்படர்நடர்கீழ்சாதியினர்தூதரொடு
சோரர்பிறர்கூடியுண்ணுந்துச்சவெச்சிலோடான
வாரார்குவிமுலையார்வாயதரபானமதை
யோராமற்சேர்ந்துபுருடோத்தமர்களுண்ணாரே. (௧௯)

வாக்கினிலேசெந்தேனுமடவியர்தம்மிருதயத்திற்
றீக்கடுவுமெப்போதுஞ்சேர்ந்திருத்தலாலவரோ
டாக்குமிதழ்ச்செந்தேனையருந்திமனமகிழ்ந்துபின்னே
தாக்கியேமார்பினின்மர்த்தனஞ்செய்வாராடவரே. (௨௰)

காமினிகர்கண முற்றிற்று.

# சுவிரத்த துர்விரத்தபத்ததி.

கருக்குந்திருக்குங்கொடியிடையிற்கவினார்மடிப்புமெவ்வனத்தின்
செருக்குமருட்கொள்வாலிபர்கள்சித்தமுருக்கும்படிநெருக்கும்
பெருக்குந்தனமுமுடைமடவார்பேரில்விகாரமன்னியிலே
யிருக்கும்புருடனெவனவனேயெவர்க்கும்புருடோத்தமனாமே. (௧)

மந்தமாந்திருட்டியினன்மருட்டுருட்டுசிமிட்டுவிடு
பந்தமாமஞ்ஞானம்பாழானதெவ்வனமும்
விந்தையாயொழிந்துமனோவிர்த்தியுங்காடுறைந்ததினி
யிந்தவுலகந்திரணமெனநினைப்போமேந்திழையே. (௨)

என்னுடையமோகவிகாரங்களெல்லாமொழிந்ததுபின்னிதயம்வாட்டு
மன்மதனும்வேடன்விடுமக்கினிபாணங்குளிர்ந்துமனோராச்சு
மின்னிடையேயின்னமுமென்மேற்கருங்கணீலமலர்விரும்பிச்சாத்துந்
தன்னுடையதன்மைவிடாளென்னுயிரைவிழுங்கவந்ததலைவிதானே. (௩)

பூங்கணையைப்போடாதேபோடாசும்மாமதனா
மாங்குயில்காளேனீங்கள்வாய்சடைக்கக்கத்துகிறீர்
வீங்குமுலைமாதேயுன்வீண்பார்வைபோதுமுள்ளம்
பாங்குடனேயெம்மான்பதமலரேவேண்டிடுமே. (௪)

கவனமிகுமநாரிகட்குவிரகத்தினிலு
மவரிலொருவர்க்கொருவனுபவச்சேர்க்கைகள்விளங்கு
மெவர்மனமொன்றாகவில்லையோவவர்க்குச்சேர்க்கையினுந்
தவனமிகும்விரகமதைத்தானேயுண்டாக்கிடுமே. (௫)

மாவடுவவ்வகிர்ந்தன்னவரிவிழியாடன்மனையிற்
சிவனுடனிருந்தாலுஞ்சிவனில்லாதிருந்தாலு
மாவறருங்கார்காலத்தடுக்குமொருவழிப்போக்கன்
போவதினியொழிவனெனப்போகானவ்விடத்தினுக்கே. (௬)

கனங்குழலார்தருஞ்சுகமோர்காலமுஞ்சாசுவதமல்லக்கவிகாளன்னோர்
தனங்கணிதம்பங்கணரகெய்தாமற்றடைசெயுமாதனாந்தனா
மனங்களிகூர்ந்திடக்கருணைமயித்திரியைச்சேரறிவாமயிலன்னாளைத்
தினந்தினமும்பிரியாமலுடன்கலந்துச்சகவாசஞ்செய்குவீரே. (௭)

யோகமார்க்கத்திலாசையுலகிலியாருடையவுள்ளத்
தேகமாய்விளங்குமன்னோர்க்கிலங்கிழைமடவார்தங்கள்

பாகனமொழியுங்கூடிப்பருகிதழ்நறுஞ்செந்தேனுந்
தாகமோடணைத்துக்கட்டித்தழுவிச்சேர்தலும்வேண்டாவே. (௮)

மன்மதனென்னுமஞ்ஞானவல்லிருடன்றுலெல்லா
மன்னமென்னடையாராய்ப்பார்த்ததுவிப்போதறிவாமையர்
லென்னுடைப்பார்வையான்றெவ்வுலகத்தியாவந்
தன்னுளேபிரமமாகச்சந்ததம்பார்க்குந்தானே. (௯)

மின்னேர்நுண்ணிடையார்வெவ்விடமார்சஞ்சலப்பார்வை
யெந்நேரவரைபார்வைக்கெதிர்ப்படாதிருந்திடுமோ
வந்நேரவரையிலும்புண்ணியவான்கட்கசைவிலாத்
தன்னேரில்லர்தபகுத்தறிவெரிமேற்றயங்கிடுமே. (௰)

எல்லாநூலுங்கற்றவர்மானினியார்சேர்க்கைகெட்டதெனச்
சொல்வார்சமத்தாயடிக்கடிவாய்ச்சொல்லாற்பின்னைப்பயனென்னே
வல்லார்முலையார்மணிக்காஞ்சிவடமார்பருத்தசகனமதிற்
செல்லாதவராசையைநிவிர்த்திசெய்யுஞ்சமத்தனெவன்றானே. (௰௧)

இந்திரலோகந்தவசுக்கேற்றபலந்தந்தருள்வ
தந்தவுலகத்துமரம்பையரேசொந்தமின்னார்
வந்தெதிரிடுங்குடிலவாதிபாவஞ்சர்களே
நிந்தைசெய்வார்மாதர்களைநிந்தைசெய்யார்மற்றவரே. (௰௨)

துங்கமதயானைமண்டைதுளைபடுத்துஞ்சேவகருந்
சிங்கமேற்பாய்ந்துகொல்லுந்தீரர்களுமெங்குமுண்டு
அங்கசவேள்கெருவமதைபடக்கவல்லாரெங்குமில்லை
யெங்குமில்லையென்றுசவைவெயங்குநீசாட்டுவையே. (௰௩)

காதளவோடிப்புருவவில்லினின்றுங்கடைபிறழுங்கடைக்கண்ணேவான்
மாதரொதுவரைமனதையிருபிளவாக்கிலையோவம்மட்டுநல்ல
நீதருடனிந்திரியநிக்கிரகநல்லொழுக்கநெடுநாள்ஞான
போதமிகுசாந்தமுதலெக்குணமுமாடவர்க்குப்பொருந்துந்தானே. (௰௪)

பேராசைப்பற்றுடையபெண்டீர்செயுஞ்செயலை
நேராய்த்திருப்பவானீண்முடியைத்தேடியபோற்
பாராதியைம்பூதம்பல்லுருவாய்ச்சிட்டிசெய்வோ
னாராய்ந்துபார்க்கிலவனாலுமாகாதே. (௰௫)

அன்னநடைமின்னார்மேலாசைகொண்டவாடவர்க்
கென்னவிவேககுணமெல்லாமிருந்தாலு
மன்மதவிடாக்கினிசர்வாங்கமெங்குமேலெழுந்து
துன்னுமட்டுகிற்குமல்லாற்சொன்னவைமேனில்லவே. (௰௬)

வஞ்சியர்விற்புருவமெமபுரவாசற்கதவுகளின்
குஞ்சிகைபோல்விளங்குவதாற்குடும்பசாகரத்தழ்ல்வோன்
விஞ்சுசாத்திரநீதிவிவேகமறிந்தோனெனினுந்
தஞ்சமெனநற்கதிகள்சார்ந்திடுதலருமையே. (௰௭)

கான்முடமொருகண்வாலிலாதிளைத்துங்கம்மெலார புழுமெ[illegible]
தூன்வழிந்தொழுகமுகப்பணியசகவொழித்து[illegible]
பானையோடலையவோடுநாய்காமப்பசிக்கெத்தர்கண[illegible]
தானையோவேனுபின்றெடர்ந்தோடத்தக்கதாய்க்காமன்வா[illegible] ()

சகந்தனைச்செயிக்குஞ்சத்தியைச்சித்தசற்குதவிடுஞ்சமத்திகளைப்,
புகழ்ந்துகொண்டாடாதகந்தையோடிகழ்ந்தபுருடராமதர்மிகள்சிலபேர்
திகம்பரர்பிரமசாரிகாபாலிதெண்டிகளாய்த்திரிவார்கள்
சுகந்தருபோகங்கிடைக்குமோகிடையாசுகமதனுணைமீறினர்க்கே. (௰௧)

சருகுசலங்காற்றும்பராசரர்கோசிகர்முதன்மாதவர்பெண்ணைசைக்
குருகுசித்தமுடையவராய்த்திரிவாரேலுருசியொடுமுருக்கிவார்க்குங்
கிருதகுளபாயசபோசனப்பிரியர்க்கிந்திய நிக்கிரகஞ்செய்ய
வருமாவப்படிவருமேல்விந்தமலைமேன்மிதந்துவருமென்பாரே.

## சுவிரத்ததுர்விரத்தபத்திமுற்றிற்று.

—oOo—

ருதுவருணனை.

## வசந்தருதுவாகிய விளவேனிற்காலம்.

மந்தமாருதஞ்சுகந்தமருவமர்குயில்கூவப்
பைந்தருக்கடளிரீனப்பனித்துளிபோன்மடவியர்தஞ்
சந்திரமாமுகம்வெயர்வைதரவரும்வ்வசந்தருது
வெந்தவஸ்துகளுக்குத்தானெய்துவியாகுனேதயமே. (௧)

கொத்தவிழ்சந்தனச்சாரற்குளிர்வாடைகுயிலோசை
மெத்தெனவேவசந்தருதுவினில்விரகிகளைவருத்த
வெத்தனஞ்செய்தனவுலகிலியாவருக்குமிடருறுங்காற்
புத்தமுதுந்தீவிடமாய்ப்போய்விடுதலியற்கையே. (௨)

அரும்பலர்கொடிப்பூம்புதைகளுங்கிலிகிஞ்சிதத்ததாமணியிழையாருங்
கருங்குயிற்றொனியுங்கவீசுரர்பிரசங்கமுகிலாவாடையும்வாசம்
பொருந்துபூந்தடமும்புட்பமாலிகையும்புண்ணியசாலிகட்கவர்செய்
பெருந்தவப்பயனால்வசந்தகாலத்திற்பெரியதோர்சுகம்பெறச்செயுமே. (௩)

---

குஞ்சிகை—தாழ்க்கோல்.

கிலிகிஞ்சிதம்-சிங்காரசத்துக்கிருப்பிடம்.

விரகமடவார்விரகவெந்தழற்காருதியூமா
மரமலர்க்கொத்திணைநோக்கிமதித்தனமாங்குயில்களுங்கண்
காதசிரமந்தணிக்கச்சூழ்ந்திடும்பூாதிரிமணத்தைப்
பூரவுழலையாநிலமேற்பரப்பிவரும்மெங்களுமே. (௪)

புதுநிலவுமிழற்றனுங்கண்பூந்தேர்மேற்றவலைதந்துவரு
மதுமலர்ச்சந்தனச்சோலைமணங்கமழுமிளந்தென்ற
லெதுவரையுங்குளிர்வீசாதிருக்குமோவதுவரையுஞ்
சதுருடைமங்கையர்க்குமனஸ்தாபமுண்டப்புறமிலையே. (௫)

தீந்தேமாம்பூங்கொத்துகளிற்செந்தேனுடனேசெறிவாச
மோந்துவ்ரிவண்டுகண்மயலின்சூழ்கும்வசந்தகாலமதிற்
சாந்தமுலையார்தமைக்காணிற்சகத்திலவிடயசுகம்பொருந்து
மதுந்தர்தமக்குளியாருடையமனந்தானவர்பாற்செல்லாதே. (௬)

## கிரீஷ்மருதுவாகிய முதுவேனிற்காலம்.

சந்தனக்குளம்பால்விளங்குகாமிகண்மந்தாநிலநிலாமணிமேடை
கொந்தலர்வாசமல்லிகைப்புட்பங்குலவியவெந்திரகிரக
மிந்தவிந்திரவைபவத்துடனுலகத்தெவருநல்லின்பமெய்திடவே
வந்திடுகிரீஷ்மருதுவின்மன்மதனைமதத்தொடுவளர்ந்திடச்செய்யுமே. (௭)

வத்திரக்களபசந்தனம்புட்பம்வளர்நிலாவுபரிகைதுளி
மெத்தைமேல்விசிறிவெறிமதுவுண்ணன்மிகுந்ததாமரைமலர்வாவி
முத்தணிமுலையார்முதலியபோகமுதிர்ந்திடுகோடைகாலத்தி
லுத்தமபுருடர்க்கல்லதுபின்னையொருவர்க்குங்கிட்டிடாதவையே. (௮)

தண்ணிலாமலர்மாலைசந்தனங்கேளிக்கிசைந்த
வண்ணமணிமேடைபெண்கள்வதனமுதிர்வேனிலிலே
யெண்ணமுறுங்காமிகளுக்கெப்போதும்விகாரமுண்டு
பண்ணுமிட்காமிகட்கதைச்சொற்பனத்துமுண்டுபண்ணுமே. (௯)

## வருடருதுவாகியகார்காலம்.

பேரவைவெளிகாட்டப்பெருத்தபயோதரம்விளங்கத்
தாராறும்புதியகறஞ்சாதிமலர்மணம்பொருந்தக்
கார்காலமாகியபெண்காமினியிற்களிப்புடனெல்
லோர்களுக்குஞ்சந்தோடமுண்டுபண்ணுவித்திடுமே. (௰)

மேகவான்றான்மூளைவிளங்குநன்னிலந்
தோகையார்வனம்பலசுகந்தவாடைக
ளேகமாய்க்கூடியேயெவர்க்குங்காதனிற்
போகமார்தருசுகம்பொருந்தச்செய்யுமே. (௰௧)

கருமுகில்சேர்ந்தப்பயிக்காட்டக்கார்ப்பருவந்தீர்க்காட்டிப்
பருபத்மேற்சென்றவிரித்துப்பசுந்தோணங்கட்டுங்காட்ட
வுருவிலிமோக்கவேச்சுடையோரெவ்விடத்தினிற்றான்
மருவியதம்பார்வையின்மலர்ந்தருளச்செய்வாரே. (௰௨)

மின்னற்கொடியின்பிரகாசம்விரிந்ததாழைமடல்வாசம்
வன்னப்புயலின்பெருமுழக்கமயிலின்றொனிகளிவ்வமுதன்மேற்
சொன்னமனோரம்மியம்பொருந்துஞ்சுதினமதுமன்மதபீடை
தன்னையடைந்துபிரிவடைந்தோர்தமக்கெவ்வாறுகழிந்திடுமே. (௰௩)

கன்னங்கரியவிருள்கார்த்தெத்திணிவீட்டோமாரி
சொன்னக்கொடிபோலச்சேர்ந்தெங்கும்வீசுமின்ன
லன்னியர்தஞ்சேர்க்கையவாவித்தனிவழிச்செல்
பொன்னனையார்க்கின்பதுன்பம்போம்வழியிற்றந்திடுமே. (௰௪)

இரவுபகல்கட்டுமழையர்செழுமிலமாட்டித்திருப்பாச்சின்டவிட்டாத
விரகசன்னதத்தாலிங்கனங்கிண்டத்தசைந்துகுளிர்வீசங்காற்றுற்
சாத்திரமந்தணிந்ததாதவிஞற்றூர்த்தின்ஞ்சதின்மார்ச்சி
தாவகலல்குலினல்லார்கலவியினைவிரும்பியவாடவர்க்குத்தானே. (௰௫)

## ௩ ருதுவாகிய குளிர்காலம்.

அத்தராத்திரிவிட்டுடன்கலந்துவங்கியாயனுபவித்திடுசிரம
மத்தியபானமதமடியுடன்சேர்மடவியர்தளர்ந்தயினாராய்
மெத்தைமேலிருந்துமதியொளிவிரிந்தவெள்ளரிப்பழமணந்தெளிநீர்
கைத்தலத்தேந்தப்புண்ணியவான்கள்களிப்புடனருந்திடுவாரே. (௰௬)

## ௪ம் ருதுவாகிய முன்பனிக்காலம்.

புத்தமுதனையவறுசுவையுடன்சேர்போசனமருந்திமேற்சிவந்த
வத்திராதிகண்மேலலங்கரித்தந்துவாசமார்பாகிலெச்சுருள்கள்
னந்தினிலொதுக்கிக்குவிமுலையணங்கனொருடன்குளிர்பனிக்காலத்
துத்தமரூர்ந்தமேடைமேற்கூடியுவகையங்கடலுண்மூழ்குவரே. (௰௭)

குங்குமசந்தனம்மலர்ச்சிகாம்பரிடைபடர்ந்தமெலவற்கொடிகண்மீது
தங்குசில்றவண்டுசைக்குஞ்சதாகதிசேர்பனிக்காலந்தன்னிற்சேரு
மங்கையராடவர்பிரிவாற்றுமையிலுண்டாங்காமவருத்தத்தாலே
கங்குலும்பகலுமதியாமெதமேலாகம்போற்போகக்கழிப்பர்தாமே. (௰௮)

## ௫ ருதுவாகிய பின்பனிக்காலம்.

ஒருவன்றதோர்திருகணத்தைமுத்திமுகத்தினிலேவெட்டுயிர்ப்புவீங்க
விருதன்தனைத்தலிதினிற்றொட்டேதுகாண்பெரியவம்பதெனப்பிற்றட்டிற்
சோருகியமுன்றனைதனைப்பிடித்திழுத்துமகச்சருவிச்சோரமாத
ருருகினில்வந்தனுதினமுமருவியகாமுகரெனக்காற்றடிக்குந்தானே. (௰௯

முன்னதாராமுதம்பருகிமுகத்தினிடைச்சீத்காரமுழங்கச்செய்து
வன்னமுலைக்கலையிழுத்துமலர்ந்தவிழிதனைமறைத்துமணமேலெய்தப்
பின்னலணிநறுந்தெரியற்பின்னலவிழ்த்துடற்புளகம்பெரிதுண்டாக
வன்னியமாதரைச்சேருமாசைநாயகரெனக்காற்றடிக்குந்தானே. (௱)

ருதுவருணனைமுற்றிற்று.

சிங்காரசதகமுற்றிற்று.

(௧)

# வைராக்கியசதகம்

## திருஷ்ணாதூடணம்.

மங்களாந்தத்துமுள்த்திலும்விளங்கிமதனனும்விட்டிலத்தீத்து
வெங்கணுங்கரையற்றிலங்குமாமோகவிருளினைப்போக்கிமேவணியினிற்
றிங்களங்கண்ணிமிலைச்சிமெய்ஞ்ஞானதீபமாயோகர்தம்மிதயந்
தங்கியசச்சிதானந்தபிரமசன்னிதிதனையுண்ணுவாம். (க)

செல்லாததேசமெங்குஞ்சென்றேனற்பரைச்சேவைசெய்தேன்மான
மில்லாதிற்றொழிமிடும்பிச்சையைப்புறம்பார்த்துக்காகமெனத்தின்றேனீ
தல்லான்மற்றொருபலனுமெனதிச்சாயத்தினத்தாலடையேனின்னம்
பொல்லாவேறாசையேயென்றிருத்தியடையாமற்போகின்றாயே. (உ)

தரைமுழுதுந்தனப்புதையலுண்டெனமண்கல்லியதிற்சங்கைதீர்த்துந்
திரைகட்டற்றாண்டியுமலையிற்றாதுகளூதியும்பிரசசேவைசெய்து
மரையிரவிற்சுடுநிலஞ்சென்றனேகமந்திரங்கள்செபித்தலைந்துமிக்கா
வரையொருசோகியுங்காணேன்வாஞ்சையேயின்னமுநீமகிழ்ந்திடாயே. (௩)

துட்டருரைக்கின்றகொடுஞ்சொல்லையுங்கேட்டுச்சகித்தே
னுட்டிணமுங்கண்ணீருமுள்ளடக்கியேசிரித்தேன்
கெட்டமதியோரையும்போய்க்கீழ்ப்பணிந்தேனின்னமுமுன்
னிட்டமொழியாயாசையேயெனைக்கூத்தாட்டுதியே. (௪)

தாமரையிலைத்தண்ணீரெனப்பிராணன்சஞ்சலரூபமாமதற்காய்த்
தீமதியொடுசெய்யாதவைசெய்துந்தினஞ்செல்வச்செருக்குடையுலோபப்
பாமரர்சவைபுக்கொப்பிலாச்சகலபண்டிதரியாமெனப்புகழ்ந்து
நாமதிபாவம்விளைத்தனமதனாமக்கொருபலனுமங்கிலையே. (௫)

அவமானம்பொறுமையன்றிப்பொறுத்தோமில்லத்தனுபோகமகிழ்ச்சியன்றி
யனுபோகித்தோஞ், சிவத்தியானங்களன்றி [illegible] பானஞ்செய்தோஞ்சீதோட்டி
ணஞ்சகித்தோந்தவத்தாலன்றி [illegible] மனமெலாம்பொருண்மேல்வைத்தற
வோர்செய்யுங்கன்மமெ [illegible] யலாஞ்செய்தோஞ்செய்துந், தவமதனு
லவாடைத்தபலத்தைமட்டுஞ்சற்றேனும்யாங்களின்னமடைந்திலோமே. (௬)

---

திருஷ்ணாதூடணம் - ஆசையைத்தூடணித்தல்.

மோகவலையிடைப்படுத்துமொய்குழலார்முதலியவெண்
போகமனுபவிக்கவிலைப்போகவிலைமுக்காலந்
தாகமுறுதவசால்வெந்தாபமடைகிலையாசை
யேகவிலைகம்வயதேயிவ்விதங்களனைத்துவே. (எ)

காசையேவிரும்பிமற்றைக்காமுகரைவிரும்பாத
வேசையுறவெனயாக்கைவிட்டதுடலெங்குதல்ல
தேசைவிளக்கிடுமுகமேற்றிரைசிரமேல்வெண்ணரையாச்
சாசைமட்டுமெவ்வண்த்தோட்டிவிலாதிருந்ததுவே. (அ)

தேகமூப்பாச்சரித்தாஞ்சிநேகம்போச்சுன்றதடிசிநேகமாச்சு
மோகவிச்சைபோகவிச்சைதொலைந்தாச்சுகொண்டாடன்முழுதும்போச்சு
மேகபடலம்மெனக்கண்டமோரோகத்தான்மறைந்துவிட்டதின்ன
மேகபிராணன்போமென்றேக்குறமென்னேழைமைதானென்னேயென்னே

விருத்தியாம்விதர்க்கபுள்ளொடுதீரமென்னும்வான்றருவினைச்சாய்க்குந்
திருட்டணையலைகண்மோகமாஞ்சுழிகடங்குறுமனோரதகலங்கள்
வருத்திடுமிராகவிடங்கர்சூழ்கிடக்குமருவியதுராசையதென்னும்
பெருத்தகான்யாற்றைத்தாண்டியோர்கிடாம்பேரின்பக்கடலின்மூழ்குவரே.

திருஷ்ணாதூடணமுற்றிற்று.

---

# விடயபரித்தியாகவிளம்பனம்.

---

கண்ணியவெம்பவத்தாலாஞ்சற்கிரியைசுகமென்வோகண்ணமாட்டோம்
பண்ணியபுண்ணியப்லன்சம்பத்துடனேபய்த்தையுண்டுபண்ணும்பூர்வ
புண்ணியத்தாற்பொருந்தியசந்தனமுதலாம்பலபோகம்புவிமேற்போகிக்
கெண்ணியக்காற்றீங்கினையேயெய்துவித்தற்கபிவிருத்தியெய்துந்தானே. (க)

பன்னாளிருந்தும்விடயசுகம்பயனற்றொழியுமொழிவதிலும்
பின்னசத்தைக்கொடுத்திடுமப்போப்பட்டதனைவிடயக்கி
தன்னாலொழியான்மற்றதனைத்தானேதெரிந்தங்கொழிப்பானே
லெந்நாட்களிலுமழியாப்பேரின்பசுகத்தையடைவானே. (உ)

தனமுதலான்வைபோர்சந்தனக்கிடமாயிருப்பதென
நனவினிற்கண்கண்டதையுஞானிகள்பொய்யெனத்தீண்டார்
கனவினுமுக்காலத்துங்காணாதுகற்பிதமாய்
மனதினிற்றோன்றிடுதலையாமறந்திருக்கமாட்டோமே. (௩)

சச்சிதானந்தத்தினையுணர்பெரியோர்தங்களானந்தக்கண்ணீரா
லச்சியேபறவைக்கூட்டங்களவர்தருடுத்தொடைமேலிருந்தருந்துங்

---

விதர்க்கம்—விடயவிச்சை.

விடயபரித்தியாகவிளம்பனம்-விடயபோகநீக்குதலைக்கூறல்.

அச்சணிமுலையாருடன்பணிமேன்மைக்கமலவர்விகன்வனங்களிலே
பிச்சையோடநுபவிப்பவர்க்காயுளேபயனின்றியேகிடுமே. (௪)

உண்பதோர்தடவையதுமுருசியில்லாவூர்ப்பிச்சை
கண்படைமண்டபமேடுகந்தையரைவத்திரமே
நண்புநிலையற்றவுடலுறுமிவ்வாறிருந்தாலும்
பண்பிலாவிடயவிச்சைப்பற்றுறமக்குநீங்காவே. (௫)

மாமிசபிண்டமாந்தனஞ்செம்பொன்மணிக்குடமலசலத்தான
மாமிருசகனமியானைமத்தகங்கோழைக்கிருப்பிடமதாம்வதனம்
பூமியிலுதயமாமதியென்வேபூஷணியவர்திகழ்த்த
தாமிச்சக்கவிஞர்வார்க்குச்சரிந்துரியத்தர்றபல்வர்றுகூறுவரே. (௬)

சிவனேகாமிகட்குளத்தனரீசன்மன்மதனைத்திக்கண்ணுற்றுட்
டவனேயிட்டாமிகட்குளதிதீரன்மற்றொருவரையுநாங்காணேம்
புவனமெலாஞ்சுடுங்காமவிட்டாக்கினிமுன்சிற்பூளைபோல்வார்கணிற்றா
யெவன்மடவாருடன்கூடல்பிரிதல்சமர்சமர்க்கிருப்பான்றானே. (௭)

அக்கினிச்சுவாலையதில்விட்டில்வீழுமறிவிலாமீன்களுண்பொருட்டாற்
சிக்கிடுந்தூண்டிறனிலவைதெரிந்துந்தெரிகிலர்போலவேநாங்க
டுக்கமாதிகளுக்கேதுவாம்பெண்களகத்திலையிழக்கவிட்டோமாட்டோ
மிக்குவலயத்தைக்கெடுக்குமாமோகமெப்படிப்பட்டதோர்ந்திலமே. (௮)

தாகமுடையோன்குளிர்ந்தசலமருந்தும்பசியுடையோன்
பாகமுடனன்னமுண்பான்பற்றுடையோன்மடவாரை
யேகசயனத்தணைவானிப்படிரோகந்தீர்ந்து
போகவிடற்கேதுவினைப்போகமெனல்பொருந்தாதே. (௯)

துலங்குமாடம்பெண்டிர்பிள்ளைதொலையாதிதியெல்லவனுதிகளிற்
கலங்கியவைசாசுவதமெனவேகல்லாமூடர்சமுசார
விலங்குக்கூடந்தனில்வசிப்பார்விவேகவான்களவையனைத்து
மிலங்குமாயாகாரியமென்றெண்ணிமனத்துறவினையரே. (௰)

விடயபரித்தியாகவிளம்பனமுற்றிற்று.

# யாசிஞைதனிய தூடணம்.

அழுதுபசியெழுஞ்சிசுதன்னைத்துணிமைப்பற்றியழுத்தலறக்கண்ணீ
ரொழுகியுடறளர்மனையாள்கவலைகண்டுள்ளுடைந்துமிடறுள்ளேவீங்கும்
வழுவிலதிதீநனர்தம்மனைப்பாசநீங்கிலிரவச்சத்தாற்றன்
புழுவெளிசாண்குழிதூர்த்தற்பொருட்டொருவர்பாலிரக்கப்போகிலானே. ( )

---

யாசிஞைதனியதூடணமென்பதிரத்தற்றொழிலைத்தூடணித்தல்.

மானமெனுமுடிக்கவிழ்ப்பதாய்த்தீரமுதலாந்தாமரைக்கூட்டங்கட்
கூனிலவாய்ப்பெருநாணெனுங்கொடியையறுக்குமரிவாளாயன்ன
பானமுதலிட்டடைத்துந் தூராதுட்குழிந்தபெரும்பூண்டும்பொல்லாத்
தீனவிர்த்தியாற்பிறர்பாலேற்றணினுநிரம்பாதுசிறிதுந்தானே. (௨)

பந்துகளைவேண்டியவர்பாலிரந்துவாழ்வதிலு
மந்தணர்தம்யாகசாலையிற்புசித்தும்வனங்களிற்போய்க்
கந்தமூலங்கடின்றுகாபாலிநாமெனவே
எந்தமனைதோறுமையமேற்றுமுயிர்வாழ்தனன்றே. (௩)

எத்தனையோபழித்தயலோரிடும்பிச்சையேற்றுழல்வீர்
முத்தனையபுனற்றிவலைமொய்த்துகங்காதீரமொடு
வித்தியாதரர்வாசமேவுசிலாதலங்களும்வா
னத்தலத்தோங்கிமயவரையதும்போயெங்கொழிந்ததே. (௪)

இலைகனிகாய்கிழங்குகடந்திட்டனவோமரவுரிகளெலாம்பாழாச்சோ
மலையருவிசுவறியதோகுறைவாழ்வாலுறுங்கெருவமாந்தீக்காற்று
லலைபுருவச்சிலைதுடிக்குங்கொலைவேந்தர்பக்கலிற்சென்றவரைப்பார்த்துத்
தலைகவிழ்ந்தேனோதினர்மதிமயங்கிநின்றுபரிதவிக்கின்றாரே. (௫)

காயரியகிழங்கருந்துகற்றரையாம்புதிதுபுதி
தாயபாயலிற்படுநாமகலுவோந்தவவனத்திற்
றீயகுணமுடையபணச்செருக்கினரையர்க்குமொன்று
மீயவிலையென்றுபிறரேசுதலைக்கேளாமே. (௬)

எண்ணியகனிகள்வனத்திலுண்டங்கேயிளந்தளிர்ப்படுக்கையுமுண்டு
புண்ணியநதிகடோறுந்தண்ணீருண்டெப்பொழுதுமச்சுகமடையாமன்
மண்ணியற்செல்வர்வாயிலிலிவரேவாயில்காப்பாளர்போற்காத்துப்
பண்ணியகன்மத்தாலறிவீனர்பற்பகல்கழித்தலைவாரே. (௭)

பொருளுடையோரிடத்தெளிமைபுகன்மூடர்விடயவிச்சைபொருந்துமோக
ரிருவர்களும்வீணாகத்தொலைத்திடுகாண்முழுதுமனத்தெண்ணியெண்ணி
யருள்பெருகுமலைக்குகைக்கற்சேக்கையினிவான்மதியானத்தினோடு
மருவுபிரமானந்தமாய்த்தனியேயினிதிருந்துமகிழுவேனே. (௮)

பெற்றதிலேமகிழ்ச்சியுறும்பெரியோர்க்கெப்பொழுதுமிச்சைபிறவாவேதன்
பற்றறப்பொற்கிரிதனைச்சம்பத்தினுக்கோரிருப்பிடமாய்ப்படைத்திட்டாலு
மற்றவர்க்குப்பணத்தாசையொருபோதுமனத்தைவிட்டுமாறிடாது
சற்றுமெனக்கிட்டமிலையக்கிரியைப்பேர்த்தவன்றந்தாலுந்தானே. (௯)

ஒருபிராயத்தினுமொழின்றித்தினமுமெங்குந்தலையுறக்கிட்டுவதாய்மரணங்
கெருவமாச்சரியமிடர்கெடுவதாய்ச்சிற்சுகந்துய்க்கிருபையோடு

திருமலற்கும்பெரியோர்க்குஞ்சம்மதமாயட்சயனன்னிதியமாகி
யருமைபெருமையுளபிச்சாகாரமதையோகிகள்கொண்டாடுவாரே. (௰)

யாசிஞைதனியதூடண முற்றிற்று.

## போகாஸ்தைரியவருணனை.

பெலமியல்போகம்வடிவங்குலந்தனஞ்சரீரம்வித்தைபெருமைக்கோர்மாற்
றலர்கலர்நோய்முதுமைவழுவாசர்நமனெதிரியேழைமையாலச்ச
முலகமதின்மானிடருக்கெல்லாவற்றினுமச்சமுடையதாகு
நலவயிராக்கியமொன்றேயொன்றினுக்குமஞ்சாதெந்நாளுந்தானே. (௧)

பிறப்பிறப்பாற்றவனந்தீவிலங்காவிந்தியசுகங்கள்பெண்போகத்தா
விறப்புறுமெவ்வனமூப்பான்மகிழ்ச்சிபொருளாசையாலிறைதுட்டாளாற்
சிறப்புடையைச்சுவரியங்கணிலையில்லாததினாற்சிலமாதி
யறப்பொருமையினோர்க்கெந்தோடத்தெதுகெடாததுகண்டீரே. (௨)

ஆதிவியாதிகளான்மண்ணவர்பலமெலாங்குறையு
மூதியமாஞ்செல்வமுறினுடனேயாபத்துமுறந்
தீதின்மிருத்துஞ்செனிவுக்கச்செனிக்கவேசிதைத்திடுவா
னீதியுடனெவையுமயனிருமியானிலைபெறவே. (௩)

போகமலைக்குச்சமானமிமைப்பொழுதுநிலையாநில்லாது
மோகமடவார்தருஞ்சுகமோமூடர்விரும்புஞ்சுகமதனை
யேகமயமாயெவையுமனத்தெண்ணிமகாபண்டிதர்களதி
வேகமுடனேபரப்பிரமவிசாரஞ்செய்யவேண்டுவரே. (௪)

வஞ்சியர்கள்போகமின்போல்வாழ்நாட்காற்றுலையுங்
கஞ்சதளத்திடைத்திவலைகழிந்திடுமெவ்வனசுகமோ
சஞ்சலமிக்குடையதெனத்தம்முளேயாராய்ந்து
விஞ்சுமதியீர்பிரமவிசாரணையேசெய்குவீரே. (௫)

அலைபோற்சஞ்சலமாயுள்யௌவனஞ்சின்னாட்குசிதமபாயத்தோடு
நிலையாமையுடையனவேண்மதசேளிசுகங்கண்மின்னனீர்பல்போகந்
தொலையாதபவக்கடலைக்கடப்பதற்குயுத்தியொடுசுருதிதானு
மலையாதன்மதியுடையீர்பிரமவிசாரணையேமற்றதுசெய்வீரே. (௬)

ஆதிமலமூத்ராதிகர்ப்பவாசத்தினுடலைதறுக்க
நீதியுடன்யௌவனத்தின்மாதரொடுகூடியப்பானீங்கறுக்கம்
வீதியின்மங்கையர்கிழவன்போவதைப்பாரெனச்சிரித்தன்மிகவுந்துக்க
மேதினிற்சுகலேசமெய்திடுமோமானிடரேயியம்புவீரே. (௭)

---

அட்சயம் = குறையாநிதி. போகாஸ்தைரியவருணனை = விடயபோகத்தினிலை
வற்புறுத்திக்கூறல். ஆதி — மனக்கவலை.

கொடியபெரும்புலிபோலேமுதுமையின்னே, யுறுத்திக்கொண்டுநிற்
குடிகொள்பகையாளியெனப்பலரோகங்களுமுடம்பைத் துன்பஞ்செய்ய(கத்
வடியினுடைந்திடும்பாண்டத்தினிரப்புந்தண்ணீர்போலாயுள்போயிப்
படியாயுமின்னமொருவர்க்கிடர்செயற்குமனிதர்சற்றும்பயப்படாரே. (௮)

சஞ்சலமாம்போகத்தாலுண்டானசமுசாரந்தன்னாலேயா
துஞ்சலைப்போற்சுழன்றாடியோடியலைமாந்தர்களேயொன்றுகேளு
மஞ்சலிர்நீரென்வார்த்தைநம்புநெஞ்சஞ்சமப்ரசன்னமாகியெம்மான்
கஞ்சமலரிணையடியைச்சிந்தியுஞ்சித்திடினற்கதிசேர்வீரே. (௯)

எந்தவிடத்திஞானீந்திராதிபோகந்துரும்பாயெண்ணுவாரோ
வெந்தருணீயாற்பிரவஞ்சத்தைரசவீனமெனவெண்ணுவாரோ
வெந்தவானந்தமழியாததாயுரைக்கடங்காதிருப்பதோநீ
யந்தவானந்தமதைச்சிந்தியற்பபோகமெல்லாமகற்றுவாயே. (௰)

போகாதைரியவருணனைமுற்றிற்று.

## † காலமகிமானுவருணனை.

அந்தககரோகர்வேந்தவனேமந்திராவரேயவனுஸ்தானம்
விந்தையதொண்டொடியார்சந்திரமுகிகள்பந்துமித்ரர்மிகவுத்தண்டர்
வந்தியருமவர்வாக்குஞ்சமத்தெனச்சொல்சமஸ்தமும்போமாறுசெய்வ
தெந்தக்காலத்தின்வசத்தந்தக்காலத்தினையாமிறைஞ்சுவோமே. (௧)

பரவுபலர்குடியிருக்கும்வீட்டொருவன்குடியிருப்பான்பலருங்காண
விரவுபலரொருவனிடஞ்சந்திப்பாரவ்வீடுவெறுவீடாமேன்
றிரவுபகலெனுமிரண்டுபாசியினைத்தினமுருட்டியியமனாதன்
றரணியெனும்பலகையின்மானிடரெனுஞ்சாரியையுடன்வைத்தாடுவானே.

சூரியோதயவஸ்தமனமோர்நாளாய்த்தொலைந்திடுமளந்திடும்வாழ்நாட்
காரியமனேகத்தாற்செலுங்காலங்கணக்கிலபிறப்பிறப்புடனே
பேரிடர்மூப்புப்பிணிபலவுறுதல்பிரசித்தமிவையெலாந்தெரிந்தும்
பாரிதுமோகமாகுமத்தியபானத்தினான்மயங்கிடுந்தானே. (௩)

வந்தாரப்பகலேவருவதுங்கழிந்தவைகலேவருவதுமறிந்து
முந்தியேசெய்தமுயற்சியேசெய்துமூடர்கள்சஞ்சலமின்றி
நந்தமக்கெதிராரெனத்திரிந்தலைவார்நாசமாம்பவமுறும்படிசெய்
யந்தவஞ்ஞானத்தவர்சற்றுநாணமதைமனத்திலுங்குறியாரே. (௪)

சிவபெருமான்றிருவடியைச்சிந்தியேந்திருத்தொண்டர்சேவைசெய்யேந்
தவமொடுகோபுரவாசற்கதவுமுதலானசிவதருமஞ்செய்யே

---

†காலமகிமானுவருணனை—காலத்தின்மகிமையைக்கூறல்.

மேலனமட்டார்சுவர்க்கங்கனவிலுமாங்கண்டிதியேமின்னுமின்னு
முவமொடுதாயெய்வனக்காடழிப்பதற்கோர்கோடாலியாகினேமே. (௫)

மீனியோனென்னச்சகலவித்தையுங்கற்றெறதிரிகளைவென்றேமில்லை
வானிஜுலியானைமண்டையிளந்திசைகொண்டேமிலைநீள்வரைமென்றே
கேளியினைவிரும்பிமதவேளெனச்சேர்ந்தேயனுபோகித்தேமில்லை. (ளார்
யாளிலாமாளிகைத்தீபம்மெனயௌவனம்விருதாவாயிற்றம்மா. (௬)

தாகமுடனனேகவித்தையூகமொடுகற்கவில்லைதருமநீதி
யாகவிதிதேடவில்லையன்னைபிதாப்பணிவிடைசெய்யவுமோவில்லை
மோகமடமாதருடன்கூடியொருசொற்பனத்துமுயங்கவில்லைக்
காகமெனப்பான்னவுணவாற்காலஞ்சீக்கிரத்திற்கழிவதம்மா. (௭)

மட்டறச்சென்னதிக்கரையில்வளர்மரங்கட்கொப்பாகமாயுமூப்பைக்
கட்டநட்டங்கெட்டபிணிமுதலிடரையுறுமூடர்காணார்கொல்லோ
விட்டமூடன்றுய்த்தகப்பனினத்துடன்வாழ்ந்திருப்பவரையிரக்கமின்றிப்
பொட்டெனவேகாலன்வந்துகட்டியுடன்கொடுபோகும்போக்கைத்தானே.

ஆயுளாறுண்டதினித்திரைபாதிவாலிபமூப்பதிலோர்பாதி
மாயுநோய்துயர்பிரயாசச்சேவையதனாலேமற்றைப்பாதி
யோயுமதிகடற்றிரைபோலிப்படிவாழ்நாண்முழுதமொழியுமானற்
றேயுயிர்த்தப்ராணிகளுக்கெப்படியுண்டாகிடுமோசேமந்தானே: (௯)

பாலனுக்சிலகாலம்யௌவனனுச்சிலகாலம்பலவாறுன
சாலநிதியோனுய்ச்சிலகாலஞ்சிலகாலந்தாழ்ந்தோனாகி
யேலமூப்பாலசியமுடனுடன்போனடித்திறுதியினிலேமக்கள்
காலனாலயத்தமுன்னேகட்டுதிரைக்குள்வெகுவேகமாய்ச்செல்வரே. (௰)

காலமகிமானுவருணனைமுற்றிற்று.

## ஸ்ரீ எதிநிருபதிசம்வாதம்.

நீரரசாட்சியினுங்களுபாசனுகுருவருளானிபுணராவே
நீர்பொருளானுங்கள்கல்விப்பொருளாற்சற்கீர்த்தியிலுநிறுத்தவல்லே
நீர்காமென்பதிற்றனஞானந்தாரதம்மியமுண்ணினைவிரேனடு
நீரெமைப்பாராதவிடத்தெங்களுக்கும்மிடத்தினிலேவிராசைதானே. (௧)

பொருளுடையீர்நீர்நாங்கள்வேதாந்தப்பொருளுடையேம்பொருவெம்போ
மருவலரைவெலுஞ்சூரர்நீர்நாங்கள்கவிகள்கெர்வமடக்கவல்லேம் (ரின்
வெருவியுமைப்பொருளுடையோர்வணங்குவர்சீடர்கள்வணங்குமேலோர்நா
ணுருபர்நீரெமைவணங்காவிடினுங்களும்மைவிட்டுநீங்குவோமே. (௨) (ங்க

ஸ்ரீஎதிநிருபதிசம்வாதம்—எதிகளுக்கும்அரசர்களுக்கும்விவாதம்.

எந்தநல்லவுடையுமமக்கெமக்குமரவுரியெனினு
நந்தமக்குமகிழ்ச்சிசமானம்மதிற்றாழ்வுயர்வில்லை
முந்தவாவுள்ளனவனேமுடிவிறரித்திரனவனே
சந்தோடமுடையோர்க்குத்தரித்திரஞ்செல்வமுஞ்சமமே. (௩)

அடுத்தபசிக்கருங்கனிகளருந்ததிப்பெரும்புனல்க
ளடுத்தநல்லமரவுரிகளுறங்கநெடுந்தரைபோது
நடுத்தவறுந்தனமதுபானக்களிப்பினாற்றங்கை
விடுத்தமன்னரபிமானமேலணுவும்வேண்டேமே. (௪)

தங்குமிடமெங்கணும்பிச்சாடனம்வாங்கிப்புசிப்போ
மங்கமதிற்றிகம்பரத்தையழகுபெறமேற்புனைவோம்
பங்கமிலாச்சிங்கமெனப்பாரின்மிசைபள்ளிகொள்வோ
மெங்களுக்குராசரிடத்தென்னவருங்காரியமே. (௫)

நாடகர்களல்லநகைக்கும்விடாரல்லவிசைப்
பாடகர்களல்லமகாபண்டிதர்களல்லசெம்பொற்
சூடகக்கையாரலச்சாதுக்களெங்கட்குங்களிட்ட
மேடகத்தார்வேந்தர்களேயெவ்வாறுகிட்டிடுமே. (௬)

சிலவேந்தரெந்நாடுந்தந்நாடாய்வென்றுசம்பாத்தியஞ்செய்வித்தார்
சிலவேந்தரந்நாட்டையொருகுடைக்கீழரசாட்சிசெய்துவந்தார்
சிலவேந்தரந்நாட்டைத்திரணமெனயாவருக்குந்தியாகமிட்டார்
சிலவேந்தராளுகைக்குட்சிலவூராள்பவர்க்கேன்வீண்செருக்குத்தானே. (௭)

அரைநிமிடமொவ்வொருத்தராயனந்தமிராசாக்களரசாளிந்தத்
தரைகிடைத்தபோதிலும்மாருயர்விலைப்பூகண்டமேசங்கடன்னிற்
கரையிலாத்துண்டுகளிலொருமூலைக்கெசமானன்களாயுள்ளோர்கா
துணையெனவெக்களிப்படைவாரவர்க்குமந்தபுத்திசித்தசுபாவமாமே. (௮)

நண்ணலர்போற்றுணைவரொடுசிறுமண்ணுண்டைக்காப்பொருதுநாடுபாகித்
துண்ணுமந்தக்கெட்டமதியுடையோரொன்றிரப்போருக்குதவுவாரோ
வெண்ணிலவராதிவீனரவர்பாலற்பப்பொருளுக்கிச்சைகூரு
மண்ணவுருயவரைப்பார்க்கிலுமறிவீனர்களெனவேமதிக்கலாமே. (௯)

எவனுடையவெண்டலையெம்பெருமான்செஞ்சடைமுடிமேலேறலாச்சோ
வவனுடையசென்மமேநல்லசென்மம்பிராணரட்சைக்காகச்சிவச்
சவமென்னப்போய்ச்சிலர்வணங்கத்தாதாநாவென்னுமதத்தாலுண்டான
வைகுரங்காசிலபேர்க்கதிலவருக்கென்னபயனல்குந்தானே. (௰)

எதிநிருபதிசம்வாதமுற்றிற்று.

# ‡ மனசம்போதனநியமனம்.

எத்தனாளும்பலவிதத்தன்னியர்கண்மனம்போனடங்கவாரந்
துக்தபொருளைப்பெறும்பொருட்டுத்தானேனிந்தப்பிரயாசை
சிந்தைதெளிவுற்றிடிற்றானே சிந்தாமணியின்றிரளொளிபோல்
வந்துபொருந்துமினைத்ததெல்லாமனமேமயங்கார்திருப்பாயே. (௧)

நெஞ்சேவீணிலலையாதேநித்தம்விரயத்தின்மன்றித்
தஞ்சமெனவேநலந்தீங்குசாரும்பொறுமையுடனிருநீ
மிஞ்சிவிடுங்காரியமுமெண்ணேன்மேலேவருங்காரியமுமெண்ணே
னஞ்சேல்வித்தியாலடைவதேதோவதையேநானுமடைவேனே. (௨)

எக்கவலைக்குமிடமாமிந்திரியவனஞ்செங்மார்க்கம்விடு
மிக்கமாலையுடன்கூடிவிளையாடுதலைவிடுசமஸ்த
துக்கநிவிர்த்திசெயுஞானசற்மார்க்கத்திற்செல்மனமே
தக்கசொரூபசமாதியைச்சந்ததமுந்தடையற்றடைவதற்கே. (௩)

முன்னமோகந்தன்னைவிடுமுக்கட்பரனைவிசுவாசி
யன்னம்பயில்கங்கைக்கரைவாசஞ்செயலைகீர்க்குமிழிசெந்நீ
மின்னற்பாம்பினிடத்துமுறவினரோடுநிசெல்வத்திடத்து
மென்னவிசுவாசம்மனமேவிவைநீயாராய்ந்தியாயே. (௪)

அரசர்புருவச்சாடையாங்குடிசிற்குடியிருந்தியாபாரஞ்செய்யும்
பரபோகஸ்திரியாயுதிலையாமையாயுமுள்ளபலசம்பத்திற்
றிரணமட்டுமாசைவையேல்சிந்தையேகாசிநகர்த்தெருவினூடே
காமதிலேற்றிடுபிச்சாகாரமதேயபேட்சிக்கக்கடவேனே. (௫)

முன்னிசைப்பாட்டோசையயற்றெக்கணதேசக்கவிகண்முழக்குமோசை
பின்னசைக்குஞ்சாமரக்கைப்பெண்கள்வளையோசையிரும்பேறுண்டானுற்
பொன்னிசையுஞ்சமுசாரத்திருந்திடில்லாவிடிற்பிறவிப்புணரிநீந்தற்
கென்னசையாமனமேநீநிர்விகற்பசமாதியிலேயிருந்திடாயே. (௬)

உத்தமமில்சரீரிகட்குச்சரீரமிருந்தாலதனுலுடையதென்னே
சத்துருக்கடலையினெஞ்சேதன்னுடையகழலிணைவைத்ததனாலென்னே
எத்தமுடைத்தாய்ப்பிரியமுடையோரைப்பாதுகாத்ததனாலென்னே
யெத்தலையோரவுண்டானுஞ்சந்நிதிநற்றாலதனாலென்னேயென்னே.

சிவநேயஞ்சராமரணபயம்பந்துசனங்களிடத்திலினிராசை
கவனமிகுமன்மதவிகாரமின்மைதுற்சனசங்கமில்லாத
தவவனத்திற்றனித்திருத்தலிவைமுதலாம்வைராக்யந்தன்னைப்பெற்று
லெவர்களுக்குமுலகுதனிலிதைப்பார்க்கப்பெறுமபேறென்றிலைத்தானே.

---

‡ மனசம்போதனநியமனம் — மனத்தைநல்வழியிற்செலுத்தல்.

மேதினியிற்பிறப்பிறப்புவிளங்குரூப்பழிவில்லாச்
சோதிசொரூபத்தையெப்போதுந்தியானஞ்செய்நெஞ்சே
பேதியாநிலைமையுறும்பிரமநிட்டனுனக்குலோ
காதிபத்யம்பிறபதவியற்பமாய்த்தோன்றிடுமே. (௯)

பேதலித்தெண்டிக்கில்வியாபிக்கின்றாய்பேய்மனமே
பாதலத்துமீதலத்தும்பட்சிபோற்றாவுகின்றாய்
காதலித்துட்சோதியையோர்காலுமெண்ணாயெண்ணினையேற்
பூதலத்திற்சிற்சுகமெப்போதுமடைந்திருப்பாயே. (௰)

மனசம்போதனநியமன்முற்றிற்று.

---

## †நித்தியாநித்தியவஸ்துவிசாரணை.

பேதமறவைக்கியமானபேர்க்குப்பிறவிப்பிணிக்குமருந்
தாதலறிவின்மகாசுகமென்றதுவேயல்லானுங்குமன்ற
வேதமுதலானவையாலும்விரும்புசுவர்க்காதியின்பலத்தை
யீதலுறுகன்மத்தாலுமேதும்பலன்கிட்டுவதிலையே. (௧)

ஊழிக்கனலால்வடமேருவுங்கேடெய்துஞ்சுவறிவிடு
மாழிப்புனலுமட்டகிரியாற்றுங்குலகுமழிந்துவிடுஞ்
சூழியானைக்குட்டியின்காதுகள்போற்சலிக்குமுடற்பொருட்டுப்
பாழினானென்றபிமானப்படுத்தித்திரிதலியாதினுக்கே. (௨)

உடற்கூனாகிப்பற்போய்க்கண்ணொளிபோய்ச்செவிடாய்ச்சிறந்தமுகத்
திடத்தேசளைவாயொழுகியெவர்க்கும்பழிப்புக்கிடமாகி
யடக்கமுறசேய்பெண்டிர்பகையாகும்விருத்தசரீரிகட்கு
நடக்குங்காலுந்தன்வாடிசானுமிதகஷ்டமாமே. (௩)

அத்திதோலுறிஞ்சண்டாளரிடிகிணற்றினைக்கண்
டுத்தமர்களொதுங்குவபோல்யுவதிகளெல்லாங்கிழவன்
சுத்தநரைத்தலையினைப்பார்த்துத்தூரவொதுங்கிநின்று
மெத்தவருவருத்தவனைவிட்டகன்றுபோவாரே. (௪)

வெந்தெரிமனைக்குக்கூபம்வெட்டயத்தனிப்பாருண்டோ
வந்திடுசரைநோய்மெய்யைவருத்திடுவதற்குமுன்ன
மிந்திரியங்கெட்டாவியேகுமுன்விவேகவான்கட்
கந்தமின்முத்திக்காணவல்வினைவேண்டுந்தானே. (௫)

மின்னனையழியாயுடல்வாழ்வினையுடையதுலகதனுன்
மன்னுதவம்புரிவோர்மாமழைவாழ்வைவிரும்புவமா
பன்னுகல்வித்தெள்ளமுதம்பருகுவமாவுறுதிபெற
வென்னசெய்வோமெனயதார்த்தத்தினையோசித்திலமே. (௬)

---

†நித்தியாநித்தியவஸ்துவிசாரணை-நித்தியமிது அநித்தியமிதுவெனவிசாரித்தல்.

குதிரையின்சைவுபோலசைமனத்தோர்கொற்றவராதலாலொருவர்க்
கெதிருறுரிராசதத்தையுந்தவிராரெங்களுக்குப்பணத்தாசை
யதிகமூப்புடம்பைக்கெடுத்திடுமியமனைவியைநோம்படிசெய்வான்
விதிவழிதவஞ்செய்வதிலுமேதனியில்வேறதிப்பிரியமற்றிலையே. (எ)

ஈனமார்பொருண்மானமுறவினர்களெவ்வணர்தொலைந்துபோம்படிக்கு
மோனமாவொர்திகளவாவுறும்படிக்குமுத்தியங்கரைபுறஞ்சூழும்
வானதியலையாற்புனிதமார்கல்லார்வரைப்புறப்பூம்புதைவசித்த
ரூனவோரும்புகழ்ந்துகொண்டாடத்தகுந்தவர்க்கேயுறுதருமே. (அ)

சந்திரிகைப்புட்பவனஞ்சாதுக்கள்சகவாச
மெத்தநூல்களுங்கேட்டவிலக்கிழையாருடலினு
டேனுந்தழுக்கண்ணீர்முகத்தைநோக்கிடனல்லவபிரமா
னந்தமிட்டையோர்களுக்கந்நலமனைத்துந்தீங்காமே. (கூ)

தண்ணிலாமணிமேடைதையலர்களொடுசகவாசஞ்சங்கீத
மெண்ணிலீங்கசதவின்பழுதவாதாசுழலும்விட்டிலிறகின்காற்றின் [கொண்டு
கண்ணசையும்விளக்கொளிபோற்சமஸ்தமுஞ்சஞ்சலமெனவேகருத்துட்
புண்ணியமாதவம்புரியும்வனங்களுக்குப்பெரியோரேன்போகின்றாரே. (௰)

நித்தியாநித்தியவஸ்துவிசாரணை முற்றிற்று.

## ‡ஶிவார்ச்சனம்.

அத்தியத்தஞ்சமுசாரசாகரத்திற்கன்மவசத்தாலேயெங்கு
னித்தமுழலெமதுகண்காணிற்காணக்கேட்கிலாநித்யனேவெ
னைத்தனுவாதியவிடயமாம்பெண்யானையினிடத்திலிச்சைகூருஞ்
சித்தமெனுமியானையைக்கட்டிடுந்தம்பானமாமெனவேசெப்பலாமே. (க)

கண்டபடியேதிரிதன்மனக்கட்டமில்லாமற்றடைத்த
துண்டல்சாதுசங்கமுறவொழிதல்விடயவிச்சைகளுட்
கொண்டதடக்கல்சாத்திரத்தின்குறைவில்கேள்விகொளலனைத்தும்
பண்டுபுரிமாதவமோவப்பலமோவெவையோவறியேனே. (உ)

என்னமுட்டிரணித்ததுயெனவனபருவங்கழிந்ததால்வினியசில
முன்னிரைந்தவினையம்வித்தைமுதலவெல்லாமொருபலனற்றொழிந்தவர்த
கண்ணிலாக்காலனும்வந்துயிர்கொடுபோகாமல்விட்டோர்காலும்போதா (த்
னண்ணல்சிவபெருமானடித்துணையேயினித்துணையென்றறிகின்றேனே.

செகதீசனுனமகாதேவமகேசனிடத்துஞ்
சகத்தந்தராண்மாவாஞ்சுரோர்த்தனன்றனிடத்துமெனக்
ககமதிலோர்பேதமில்லையானாலுமெப்பொழுது
மகதேவனிடத்தேயென்வாஞ்சைமிகச்சென்றிடுமே. (ச)

‡ஶிவார்ச்சனம்—சிவபூசைமகிமை.

அரவமொடுங்கிரவினிலவதிற்கங்காதீரமதி
லாணியஞ்சூழ்புளினமதிலனந்தசென்மமொழித்திடும்யா
மாகரவோஞ்சிவசிவவென்றுணர்ந்தபரவசமா
யாசர்மற்றையெவரெமக்கொப்பானவரென்றிருப்போமே. (௫)

பொருண்முழுதுஞ்செலவழித்துப்போகாதியொழிகவென
மருவுமனத்துடனேதெய்வர்தமைமுனிவர்தமைசெய்
தருமைமிகும்புண்ணியாரண்ணியத்திலிருந்துசிவன்
றிருவடியைச்சாருதுச்சந்திரிகைதனினினைப்போமே. (௬)

வாசதிக்கரைநின்றகோவணமதுதரித்துச்
சிரசிலஞ்சலியஸ்தனாய்த்திரிபுராந்தகவோ
மாகராரட்சரட்சவென்றனுசந்தானனுமா
யிரவுநன்பகல்கணமெனக்கழிப்பதென்றினியே. (௭)

சங்கராவிராசசேவையைவிடுத்துச்சற்குருவாக்கியபானு
மங்குறேய்நெடியமலைக்குகைதனிலான்மநிலனுமனத்தினையடக்கிக்
தங்கையின்மூழ்கிமஞ்சனமாதிகளாலுனையன்புடன்பூசித்
தங்குளபலாதிகளைப்புசித்தென்றேவடியனேன்றனித்திருப்பதுவே. (௮)

ஐயர்சிவனேயேகாங்கியாசிகிராசையுடையவனு
மெய்யாய்விருப்புவெறுப்பிலனுமிகுந்தசாந்தம்பொறுமையொடு
கையேபிச்சைப்பாத்திரனுக்கர்ந்தையொழித்துத்திகம்பரனுப்
பொய்யாங்கன்மத்தடிவேரைப்பொழுதுட்டறுத்துப்போக்குவனே. (௯)

எந்தவிடத்தும்வசிப்பதுமாயிருக்கைவிரப்போடுடையதுமாய்
வந்தபுசிப்பின்மகிழ்வதுமாய்வையர்தரும்பாய்மதிப்பதுமா
யந்தவகண்டசிற்சுகத்தையடையும்யோகிசிவனருளாற்
பந்தமகன்றுசீவன்முத்திப்பதத்தைத்தடையற்றடைவானே. (௰)

சிவார்ச்சனமுற்றிற்று.

# † அவதூதசரியை.

சுந்தையாயிரங்கனுடைக்கௌபீனவுடைநடுப்பகலிலேதானே
வந்தபிச்சையூண்சுடுசுடுகாட்டிப்படுக்கைகணன்மார்க்கசித்தம்
பந்தமற்றுத்திரிதல்சிவயோகநிட்டைப்பழக்கவனுபவமுண்டானு
லந்தயோகிக்குமற்றைத்திரிலோகாதிபத்தியமேனதுவேண்டாவே. (௧)

கெண்டைமீனுதியநீர்கிழித்துவிளையாடுதலாற்
றெண்டிரைவாருதிப்புனல்கள்சிறிதேனுநடுங்காவா
மண்டலமாத்திரமாம்பிரமாண்டமாமூலோபமதை
யுண்டுபண்ணமாட்டாவாமொருக்காலுந்தீரருக்கே. (௨)

† அவதூதசரியை—முற்றத்துறந்தோர்சரித்திரம்.

பொன்னம்மையைப்பணிவேன்மெய்ஞ்ஞானவாழ்வெனக்குப்பொருந்தச்
செய்வா, யின்னமொருவனைச்சேரென்னிச்சைதவிர்போகத்திலிச்சையோ
வுன்னையடுத்திடுவானென்றொருபசியபுரசிலையாமுவந்தபாத்திரந் (னே
தன்னையொருகரத்தேந்திப்பிச்சாவிர்த்திக்கேயத்தினஞ்செய்வேனே. (௩)

பூவணைமண்டரைக்கையேதலையணையாகாயமேபுனைமேற்கட்டி
யேவலுறுந்தென்றலேவிசிறிநிலவேதீபமிலைகளோடு
மாவலொழிந்திடுவிரத்தியாந்தருணமாதுடன்சேர்ந்தனுபோகித்துக்
காவலன்போற்சாந்தமிகுஞ்சிவயோகியிராக்கண்ணுறங்கச்செய்வானே. (௪)

அடக்கம்பொறையைந்திந்திரியமடக்கறனிமைசுவாதீன
நடக்கைவிரத்திமார்க்கமுடனுற்சந்திகடோறுங்கிழிந்து
கிடக்குந்துணிகீழுடையோனாய்க்கிளைக்கும்பிறவிப்பெருங்கடலைக்
கடக்குமார்க்கங்கண்டுலகின்கண்ணோர்தவசிவிளங்குவனே. (௫)

பித்தனோஜாதிப்பிரட்டனோசூத்திரனோ
பத்தனோவேதியனோபற்றொழிந்தமாதவனோ
சித்தனோவென்னச்செகம்பழிக்கக்கோபமற்றுச்
சுத்தமௌனிகடஞ்சேர்க்காய்த்திரிவாரே. (௬)

இரணமனேகம்பசுக்களுக்குந்தென்றல்வியாளங்களுக்குமருள்
பிரமனிவர்க்குமப்படியேபிரயத்தினமற்றூழ்வசத்தாற்
றரவுஞ்சமுசாரக்கடலைத்தாண்டுதீர்க்கமதையுடைய
நார்மற்றதைத்தாந்தேடுவரேணசிக்கும்பலநற்குணங்களுமே. (௭)

கங்கைக்கரைசூழிமயவரைக்கல்லிற்பதுமாசனத்திலிருந்
தங்குப்பிரமானந்தியானதியோகந்நித்திரையிற்
றங்கிவிளங்குமென்னுடம்பிற்றங்கடினவுதீர்ந்திடவே
செங்கட்கிழமானினங்களெல்லாந்திரளாய்க்கூடியுரைசிடுமே. (௮)

தன்னதிரப்புப்பாத்திரங்கைதரைபூவமளியட்டதிக்குந்
துன்னுகலையிப்பெருவாழ்வின்சுகமேலெவற்குக்கிடைத்திடுமோ
வன்னோனியற்றுஞ்சரித்திரஞ்சுவானுபூதியாமவனே
கன்மவினைதயைச்சுட்டதிமோகபாசங்களைவேரறுப்பானே. (௯)

தந்தைகாற்றனைபூமிசார்ந்தசினேகிதன்றபனன்
பந்துசலஞ்சகோதரன்பரமாகுமுங்களுக்கு
வந்தனமும்மாலடைந்தமகத்துவமெய்ஞ்ஞானத்தாற்
சிந்தைமயக்கறப்பிரமதியானமதையடைந்தேனே. (௰)

## வைராக்கியசதகமுற்றிற்று.

ஆண்பால்பெண்பாலலியாயல்லதுமாயுள்ளதுமாய்ப்
பூண்பானும்புசிப்பானும்புணர்வானும்புணர்ப்பானுங்
காண்பானுங்காட்சியுமாய்க்கர்மகர்த்தாவெல்லாமாய்
மாண்பாயபரப்பிரமமாநிலத்துவாழியவே.

## பர்த்ருகரி முற்றிற்று.

ஆ பாயிரமுள்பட—கவி—௩௱௰.

—ooo—